


இல்லத்திலே ஸர்ப் இருந்தால் சலவையிலே உங்களை மிஞ்ச முடியாது. அத்தனை வெள்ளைவெளேரென்ற துப்புரவு; வேலையும் வெகு எளிது. எல்லாம் ஸர்ப் செயல், அதன் அளவுகடந்த சலவைத் திறன். சட்டை, சேலை, சிறுவரின் உடைகள் யாவினுக்கும் உகந்தது ஸர்ப்.

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

SU. 23-X32 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

# அமிர்தாஞ்சனம் இப்பொழுது புதியதொரு சிக்கன உறையில் கிடைக்கிறது




நாட்டின் சக்திகள் எல்லாம் தற்போது தேசப் பாதுகாப்பிற்காகத் தேவைப்படுகிறது. இக் காரணத்தினால் அமிர்தாஞ்சனம் பாக்கிங்கில் ஓரிரண்டு சிறு மாறுதல்கள் ஏற்படுத்தியுள்ளோம். இதுவரை வெள்ளிய டப்பாவில் பாக் செய்யப்பட்டு வந்த அமிர்தாஞ்சனம் சீசா இனி சாதாரண அட்டைப் பெட்டியில் பாக் செய்யப்படும். மேலும், சீசாவினுள்ளே இருக்கும் அமிர்தாஞ்சனத்தின் இரட்டிப்பு பாதுகாப்புக்காக 'அலு-காப்' ஸீல் செய்யப்பட்டுள்ளது. தலைவலி, சுளுக்கு, மார்பில் ஜலதோஷம், கீல் வாயுவினால் ஏற்படும் வலிகள் மற்றும் எல்லா விதமான வலிகளையும் அமிர்தாஞ்சனம் போக்குகிறது. இந்த உபாதைகள் உங்கள் உடல் நலனை பாதிப்பதனால் தொழில் உற்பத்தி பாதிக்கப்படுகிறது. ஆகவே தொழில் உற்பத்தியைப் பெருக்கவேண்டிய இந் நிலையில் எப்போதையும்விட அமிர்தாஞ்சனம் இன்று அதிகமாகத் தேவைப்படுகிறது.

**அதிக சக்திவாய்ந்தது, சிக்கனமானது, பல உபாதைகளுக்கு சிறந்தது**

இன்று விற்பனையாகும் வலி நிவாரணிகளுள் அமிர்தாஞ்சனம் குறிப்பிடத்தக்க குணாதிசயங்களுடன் கூடியது. ஏனெனில், மற்ற மருந்துகளைவிட இதில் அதிக சக்தி வாய்ந்த மூலிகை சத்துக்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அமிர்தாஞ்சனத்தின் இக் கூடுதலான சக்தி, சருமத்தினுள் உடனடியாக ஊடுருவிச் சென்று, ரத்த ஓட்டத்தை ஊக்கப்படுத்துவதன் மூலம் சீக்கிரத்தில் குணமளிக்கிறது. சிறிதளவு அமிர்தாஞ்சனமே வலிகளை அகற்றப் போதுமானது. வீட்டில் அனைவரும் உபயோகப்படுத்தும்போதுகூட ஒரு பாட்டில் அமிர்தாஞ்சனம் பல மாதங்களுக்குவரும்.



## அமிர்தாஞ்சனம்

உபாதைகளிலிருந்து
உங்களைப் பாதுகாக்கிறது

அமிர்தாஞ்சன் லிமிடெட், 14/15 லஸ் சர்ச் ரோடு, மதறாஸ் 4.

JWT/AM-0229

# கல்கி



படவிளக்கம் 8ம் பக்கம்

## பொருளடக்கம்   

சோபகிருது, சித்திரை 8உ ★ ஏப்ரல், 21உ 1963



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# புசிக்கவும் ஆசை, புகைக்கவும் ஆசை?




உயரிய பண்போடு
உபயோகிப்பதற்கும்
உதவுவதற்கும் உகந்தது

**பனாமா**

சம்பிரதாய விருந்துகளின்போது புகைபிடிப்பது இக் காலத்திலே விலக்கல்ல. வசதி அளிக்கப் பெற்றிருப்பின், உணவருந்தும் போது தாராளமாக நீங்கள் புகை பிடிக்கலாம். எங்கே சிகரெட் இடம் பெறவில்லையோ அன்றி வழங்கப்பெறவில்லையோ அங்கே நாமாக சொந்த சிகரெட்டைப் பற்றவைக்காமலிருப்பதே பண் பாட்டுக்கு அடையாளம்.

Panama
20
CIGARETTES

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

இழுக்க
இழுக்க
இன்பம்—
இறுதிவரை

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 412 TAM. Greces' Advtg.



மலர் 22 | இதழ் 38

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# ஊழல் ஆட்சி

காந்தியடிகள் வாழ்ந்த நாடுதானா இது என்று ஐயுறும் அளவுக்கு அரசாங்கத்தில் ஊழல்கள் மலிந்திருக்கின்றன. காங்கிரஸில் சத்தியம் நிறைந்த ஒருவர் என்று நாம் நம்பியுள்ள நேருஜியும் நாளாக ஆகத் தமது சகாக்களின் தவறான செயல்களைப் பழிக்கத் தயங்கி வருகிறார். காங்கிரஸ் மந்திரிகளின் ஊழல்களைப் பற்றி அருசியான தகவல்கள் வெளியானால் 'இதெல்லாம் காங்கிரஸைக் கண்டிக்கும் ஓர் அரசியல் தந்திரமே' என்று அலட்சியமாகப் பேசுகிறார். தவறு செய்தவர்கள் தைரியம் அடைகிறார்கள். ஊழல் வளரக் கேட்பானேன்?

தொழில் துறையை ஆக்கவும் அழிக்கவும் சர்வ அதிகாரத்தைக் கவர்ந்துள்ள ஆட்சியாளர்கள் எப்படியெல்லாம் கட்சிக்குப் பணம் திரட்டி யிருக்கிறார்கள் என்பதை எண்ணினாலே அருவருப்பு உண்டாகிறது. 'கட்சிக்கு நன்மை செய்தால் உங்களுக்கு பெர்மிட்டும் லைசென்ஸும் கோட்டாவும் தருவோம்; செய்யாவிடில் நீங்கள் தலையெடுக்க முடியாதபடி தடை உத்தரவுகளும், கட்டுப்பாடும் போடுவோம்' என்பதாகச் சொல்லி மோகனாஸ்திரத்தையும், யம பாசத்தையும் மாற்றி மாற்றிக் காட்டிக் காங்கிரஸ் கட்சி கஜானாவை நிரப்பி யிருக்கிறார்கள். ஆனால் தொழில் நிறுவனங்கள் அன்பின்மீதே தங்களுக்கு நன்கொடைகள் கொடுத்தன என்று கூசாமல் புளுகுகிறார்கள்.

தொழிலகங்கள் ஆளும் கட்சிக்குத் தரும் தொகையை 'நன்கொடை' என்று சொல்வதே தவறாகும். சட்டத்தின்படி, அதிகாரத்தைப் பயன்படுத்தியோ, பயன்படுத்துவதாகப் பயமுறுத்தியோ, ஆசை காட்டியோ பணம் பெறுவது குற்றமாகும். அரசியல் வார்த்தை ஜாலங்களும், தகிடுதத்தங்களும் இந்தக் குற்றத்தைப் பூசி மெழுகிவிட முடியாது. தொழிலதிபர்கள் அரசியல் கட்சிகளுக்கு நிதி உதவப் பாராளுமன்றத்தின் சட்டம் உள்ளது என்பது குற்றத்தைக் குறைக்காது.

ஊழலை எடுத்துக் காட்டுவது எதிர்க்கட்சிகள் என்பதால் அதனைப் பிரதமர் அலட்சியம் செய்துவிடலாம்; ஆனாலும் உண்மையை அவரால் பொய்யாக்க முடியாது. எதிர்க்கட்சிகளின் அவசியமே இதுபோன்ற சந்தர்ப்பங்களில்தான் நன்கு வெளியாகிறது. ஜனநாயகத்தின் உயிர் பிம்பங்களான தேர்தல்களைப் பணத்துக்குத் தலையாட்டும் பொம்மைகளாக்கும் இந்த அதர்மத்தால்தான் எதிர்க்கட்சிகள் இந்நாட்டில் கணிசமான அளவுக்கு முன்னேற முடியவில்லை. அவை இந்த அநியாயத்தை எப்படிச் சகிக்க முடியும்?

இந்தச் சந்தர்ப்பத்தில் சுதந்திரக் கட்சியின் நிதி நிலைமை பற்றிச் சமீபத்தில் பத்திரிகைகளில் வெளியாகியுள்ள தாறுமாறான தலைப்புக்கள் பற்றியும் குறிப்பிடலாம். காங்கிரஸுக்கு "அடுத்தபடியாகச்" சுதந்திரக் கட்சிக்குத் தொழிலகங்களின் நிதி ஆதரவு கிடைத்திருப்பதாக இந்தச் செய்தி கூறுகிறது. "அடுத்தபடியாக" என்பது ஏமாற்றும் சொல். முதல் படிக்கும் இந்த அடுத்தபடிக்கும் எவ்வளவு தாரதம்மியம் என்பது செய்தியை முற்றிலும் படித்தால் தெரியும். இரண்டொரு கம்பெனிகள் காங்கிரஸுக்கும் சுதந்திரக் கட்சிக்கும் கொடுத்திருக்கின்றன. அவை அதேசமயம் காங்கிரஸுக்கு அதிகமாகக் கொடுத்து, சுதந்திரக் கட்சிக்குக் கொடுத்ததைப் பயனறச் செய்திருக்கின்றன. காங்கிரஸுக்கு மட்டும் வாரி வழங்கியுள்ள கம்பெனிகள் அனந்தம். காங்கிரஸுடன் பணப் போட்டி யிடுவதில், ஆளும் கட்சியைக் கண்டு மக்கள் பயப்படும் காரணத்தினால் சுதந்திரக் கட்சி மிகப் பின்தங்கியே இருக்கிறது.

காங்கிரஸ் சர்க்காரின் லஞ்ச ஊழல் குறைய வேண்டுமானால் இன்றைய பொதுத் தேர்தல் முறையை மாற்றியே ஆக வேண்டும். ராஜாஜி நீண்ட காலமாகக் கூறி வருவது போல், எதெதையோ தேசிய மயமாக்கும் சர்க்கார் பொதுத் தேர்தல்களைத் தனது செலவில் நடத்த முன்வர வேண்டும். எல்லாக் கட்சிப் பிரதிநிதிகளுடனும் அதிகாரிகள், வாக்காளர்களின் வீடுகளுக்குச் சென்று வோட்டு சேகரிக்க வேண்டும். இவ்வாறு செய்யாவிடில் ஜனநாயகம் இல்லை.

# ஈழத் தமிழருக்கு இன்னுமோர் இடி

இலங்கையைத் தங்கள் நாடாகக் கொண்டு வாழும் இந்திய வம்சாவளியினருக்கு மேலும் இன்னல் இழைக்கக் கூடிய ஒரு சட்டம் உருவாகி வருகிறது. இலங்கைக் குடிகளுக்கு மட்டுமே வேலை வாய்ப்புக்கள் அளிக்க வேண்டும் என்பது அந்நாட்டுச் சர்க்காரின் புது யோசனையாகும். இலங்கைக் குடிகள் யார் என்பதற்கு அந்தச் சர்க்கார் தரும் விசித்திர விளக்கம் நாம் அறிந்ததே. பல்லாண்டுகளாக இலங்கையில் வாழ்ந்து அந்நாட்டின் மேன்மைக்குச் சகல விதத்திலும் பாடுபட்டு இலங்கையையே தங்கள் நாடாக அமைத்துக் கொண்டு வாழும் இந்திய மக்களுக்கு — அதாவது தமிழர்களுக்கு — பிரஜா உரிமை அளிக்கக் கூடாது என்பதில் இலங்கை சர்க்கார் எவ்வளவு முனைப்பாக இருந்து வருகிறது என்பது நமக்குத் தெரியும். எனவே, இப்போது 'இலங்கைப் பிரஜைகளுக்கே வேலை வாய்ப்புக்கள்' என்று கூறுவது அந்நாட்டுத் தமிழர்களுக்கு அநீதியாகவே முடியும் என்று அஞ்சுகிறோம். இவ்விஷயம் நமது லோக சபையில் விவாதத்துக்கு வந்தது. அப்போது வெளி விவகார மந்திரிணி ஸ்ரீமதி லக்ஷ்மி மேனன் இரண்டுங் கெட்டானகப் பதில் கூறியுள்ளார்.

'இலங்கையின் மலைத் தோட்டங்களில் பணி புரியும் ஏராளமான நாடற்ற இந்திய வம்சாவளியினருக்கு அசௌகரியம் ஏற்படாமலிருக்க நம்மால் முயன்றதெல்லாம் செய்வோம்' என்று கூறியதோடு அவர் நில்லாமல், 'இலங்கைப் பிரஜைகளே அந்நாட்டில் முதல் உரிமைகள் பெற்றிருக்க வேண்டும் என்பதற்காக அந்நாட்டு அரசாங்கம் எந்த வகைய நடவடிக்கையும் எடுக்க உரிமை பெற்றிருக்கிறது' என்றும் சொல்லியிருக்கிறார்.

அவர் எந்தக் கருத்தில் இப்படிச் சொல்லியிருந்தாலும் இதனை ஈழத்துச் சிங்களவரும், சர்க்காரும் தங்களுக்குச் சாதகமாகத் திரித்துக் கொள்ளக்கூடும். மந்திரிணியின் அயுக்தமான பதிலுக்கு வருந்துகிறோம்.

இலங்கையையே தமது தாயகமாகக் கொண்டு உழைத்து வருபவர்களும், உலகில் வேறெங்கிலும் வீடு வாசலோ, சொத்து சுதந்திரமோ அற்றவர்களுமான ஏராளமான தமிழ் மக்களின் பிரச்னையில் இந்திய சர்க்கார் உண்மையான கவனம் செலுத்த வேண்டியது அவசியமாகும். இவ்விஷயத்தில் இந்திய சர்க்கார் போதிய ஆதரவும், அநுதாபமும் காட்டவில்லை என்ற கசப்புணர்ச்சியை நீக்க இனியாவது தக்க நடவடிக்கை எடுக்க வேண்டியது ஆட்சியாளரின் கடமையாகும்.

# என்ன சேதி?

## புதிய தூதர்

இந்திய நாட்டுக்கு அமெரிக்கத் தூதராக செஸ்டர் பௌல்ஸ் அவர்கள் வருகிறார்கள் என்ற செய்தியைக் கேட்டு இந்தியாவில் பலர் மகிழ்ச்சி யடைவார்கள். அவர் ஏற்கனவே 1951-53ல் இந்தியாவின் அமெரிக்கத் தூதராக இருந்து பணியாற்றி இந்தியாவின் அரிய நண்பர் என்ற பெயரைச் சம்பாதித்தார். இந்திய மக்களின் குறைகளையும் நிறைகளையும் நன்கு அறிந்தவர். இன்று இந்தியாவுக்கு வரும் அமெரிக்கத் தூதர் மிகவும் நளினமாக இந்திய விவகாரங்களைக் கையாளவேண்டும். இன்று இங்கு ஆளும் பொறுப்பிலுள்ளவர்கள் பகிரங்கமாக அமெரிக்காவின் உதவியும் நட்பும் வேண்டும் என்று சொல்லாமலே முழு உதவியும், நட்பும் எதிர்பார்க்கிறார்கள். இப்படிப்பட்ட மன நிலையைப் புரிந்து கொண்டு அமெரிக்க மக்களுக்கு உணர்த்துவதும், அந்த 'இரண்டுங் கெட்டான்' உணர்ச்சி அமெரிக்க மக்களுக்கு எவ்வளவு ஏமாற்றத்தை அளிக்கிறது என்பதை இங்கு ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்களுக்கு எடுத்துக் கூறிப் புரிய வைப்பதும் மிகக் கஷ்டம். இத்தகைய சங்கடமான சூழ்நிலையில் இந்தியாவுக்கு வரும் தூதரின் பணி வெற்றிகரமாக அமைய வேண்டும் என்று கூறி வரவேற்கிறோம்.



செஸ்டர் பௌல்ஸ்

அதே சமயத்தில் இந்தியாவை விட்டுச் செல்லும் அமெரிக்கத் தூதர் கால்பிரெய்த் அவர்களின் பணிக்கு நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறோம்.




## வெட்கக்கேடு

ஆக்கிரமம் செய்துள்ள சீன சர்க்கார் சமாதான யோசனைகளையெல்லாம் மறுதலித்து வரும் போது, இந்தியா இன்னும் சமாதானப் பேச்சு வார்த்தைகளுக்குப் பிரயாசைப்படுவது வெட்கக் கேடான காரியம். இந்தோனீசிய ஜனாதிபதி சுகர்ணரிடம் சீன–இந்திய பிரச்னையில் தலையிடுமாறு யாசித்துள்ள பிரதமர் நேருஜி இந்தியாவுக்கு அவமானத்தைத்தான் தேடி வருகிறார்.

இதனால் நமது தேசிய கௌரவம் சிதைவது மட்டுமல்ல. நமக்கு உதவுவதைப் பற்றி மிகவும் தயக்கம் காட்டும் அமெரிக்க சட்ட சபையும், அந்நாட்டுப் பொதுமக்களும் மேலும் ஐயம்கொள்ளுவார்கள். சுகர்ணருடைய சீன–ரஷிய அன்பு அனைவருக்கும் தெரிந்த விஷயம். நமக்கு உதவி செய்பவர்களுக்கு உரிய முறையில் நன்றி தெரிவிக்காததோடு, அவர்களுடைய உதவிப் பணிக்கு நாமே இடையூறுகள் உண்டாக்கும் வழியில் காரியங்கள் நடைபெறுகின்றன.

இந்தியாவும் அமெரிக்காவும் வலுவான நட்பு இணக்கம் பெறக் கூடாது என்பதையே குறியாகக் கொண்டுள்ள கம்யூனிஸ்ட் நாடுகள் மகிழ்ச்சியடைய வாய்ப்பளித்திருக்கிறார் நேருஜி.

போர் முனையில் தவிர்க்க முடியாமல் தோல்வி கண்டது போதாதென்று தூது முறையிலும் நாமாகவே மானபங்கத்தைத் தேடிப் பெற்று வருகிறோம். யுத்தத்தில் தோல்வியடைந்தது ஒரு புறம் இருக்க, இந்த அவமானத்தையும் நாம் மூட்டை கட்டிக் கொள்வதா?

## சட்டமும் ஆங்கிலமும்

இந்திய அட்டர்னி ஜெனரல் ஸ்ரீ ஸி. கே. தப்த்ரே, 'நீதித் துறையிலிருந்து ஆங்கிலம் அகற்றப்பட்டால், விபரீதமான விளைவுகள் ஏற்படும்' என்று தக்க சமயத்தில் எச்சரிக்கை விடுத்திருக்கிறார்.

''மனு நீதி கண்ட சோழன் வாழ்ந்த தேசம், மனுஸ்மிருதி தோன்றிய தேசம் நம் தேசம்; இங்கு ஆங்கிலத்தில் நீதி நிர்வாகம் நடப்பதா?'' என்று கேட்டு, தேசத்தில் இத்துறையையும் பிராந்திய மொழிகளில் நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கிளர்ச்சி நடந்து வருகிறது. மொழிவழி மாகாணம் பிரிந்து எப்படித் தேச ஒற்றுமை சிதைந்து கிடக்கிறதோ அப்படியே நீதி நிர்வாகம் மாற்றப்பட்டால் நீதி நேர்மையாக வழங்கப்படாது. சட்டம் சென்ற நூற்றைம்பது ஆண்டுகளில் மிக நுட்பமாக வளர்ந்து வந்திருக்கிறது. இந்த அரிய சாஸ்திரம் அரசியல்வாதிகளின் கைப் பாவையாகிச் சின்னு பின்னப்பட்டுப் போகாமலிருக்க வேண்டும் என்பதற்காக ஸ்ரீ தப்த்ரே தக்க சமயத்தில் செய்த எச்சரிக்கையை நீதியிலும் நேர்மையிலும் சட்டத்திலும் அக்கறை கொண்டவர் ஒவ்வொருவரும் வரவேற்க வேண்டும்.

## தமிழில் உயர்தர பாட புத்தகங்கள்

காயை அடித்துப் பழுக்க வைத்தால் அதில் என்ன சுவை இருக்கும்? அம் முறையில் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட பாடப் புத்தகங்கள் சில

சென்ற வாரம் மந்திரிகள் முன்னிலையில் வெளியிடப்பட்டிருக்கின்றன. கல்லூரியில் தமிழைப் போதனை மொழியாகக் கொண்டு வர வேண்டுமானால் தமிழில் கல்லூரிக் கல்விக்கு ஏற்ற பாடப் புத்தகங்கள் இல்லையே என்று ஆசிரியர்கள் குறைப்பட்டு வந்தார்கள். அவர்களுக்கு ஆங்கிலப் பாடப் புத்தகத்தை வைத்துக் கொண்டே தமிழில் போதனையை நடத்துங்கள்என்று சொல்லியிருக்க வேண்டியதுதான் முறை. அதற்குப் பதில் பொருள் மட்டும் தெரிந்து தமிழ் தெரியாத ஆசிரியர்களையும், தமிழ் மட்டும் தெரிந்து பொருள் தெரியாத ஆசிரியர்களையும் கொண்டு புத்தகங்களை மொழிபெயர்த்து வெளியிட்டால் அவை என்ன லட்சணத்தில் இருக்கும் என்று சொல்ல வேண்டியதேயில்லை. மேலும் இந்த முயற்சிக்காக லட்சக் கணக்கில் பணம் செலவழிக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள். பணத்தினால் ஊக்கப்படும் எந்த முயற்சியும் வெற்றி கண்டது இல்லை. பணத்துக்காகப் போட்டியும் பொறாமையும் சண்டையும் குழப்பமும் ஏற்படும் என்பதைச் சர்க்காருக்குச் சொல்லி எச்சரிக்கை செய்கிறோம்.



திரு ஏ. எஸ். பி. அய்யர்

## ஏ. எஸ். பி. அய்யர் மறைவு

சட்டத் திட்டத்துக்கு உட்பட்ட மிகவும் பொறுப்பான ஒரு பதவியைச் சிரித்துச் சிரித்தே சிறப்புற ஆற்றிய ஸ்ரீ ஏ. எஸ். பி. அய்யர் அவர்கள் இன்று தமது எண்ணிறந்த நண்பர் குழாத்தைக் கண்கலங்கச் செய்து, மறைந்து விட்டார்.

சென்னை உயர்நீதி மன்றத்தின் நீதிபதியாகப் பதினேராண்டுகள் நற்பணி ஆற்றியுள்ளவர் ஸ்ரீ அய்யர். மனுநீதி முறையில் அசைக்க முடியாத நம்பிக்கை படைத்த அவரது தீர்ப்புக்களில் மனிதாபிமானம் பாங்ுற இணைந்து நிற்கும்.

இலக்கியத்துக்கானராயல் சொஸைடி. 'பென்' முதலிய ஸ்தாபனங்களின் அங்கத்தினரான ஸ்ரீ ஏ. எஸ். பி. அய்யர் பல அரிய ஆங்கில நூல்களின் ஆசிரியராவார். அவரது பகவத் கீதை, பஞ்ச தந்திரம் முதலிய ஆங்கில மொழி பெயர்ப்புக்கள் அறிஞர்களின் பாராட்டைப் பெற்றவையாகும்.

பெரிய பெரிய பதவிகளை வகித்த போதிலும் பொதுமக்களில் ஒருவராக வாழ்ந்து வந்தார் அவர். தமது ஆற்றலை எளிய தோற்றத்தால் மறைத்து மக்களோடு மக்களாகப் பழகி அவர்களைச் சிரிப்பின் மூலம் சிந்திக்க வைத்தார் ஸ்ரீ அய்யர். பற்பல துறைகளில் பரிசயம் கொண்டு தாம் பெற்றிருந்த அறிவை எல்லோருடனும் பகிர்ந்து கொண்டார் ஸ்ரீ ஏ. எஸ். பி. அய்யர். மலையாளப் பிராஸம் கலந்த மழலைத் தமிழில் தமிழ் இலக்கியம் பற்றி அவர் பேசியுள்ள பொதுமேடைகள் பலப்பல. ஸ்ரீ ஏ. எஸ். பி. அய்யரையும் அவரது நகைச்சுவையையும் தமிழகம் என்றும் மறவாது.

## மூனிச் மியூஸியம்

உலகின் பல்வேறு நாடுகளிலிருந்து சேகரிக்கப்பட்ட சங்கீதக் கருவிகளைக் கொண்ட ஒரு பகுதி பவேரியா நாட்டின் தலைநகரான மூனிச் நகரின் மியூஸியத்தில் அமைக்கப்பட்டுள்ளது. இங்குள்ள சங்கீதக் கருவிகளின் எண்ணிக்கை 4000க்கும் அதிகமாக இருக்கிறதாம். இக் கண்காட்சியில் ஒரு முக்கிய பகுதி கிழக்கு ஆசிய நாடுகளைப் பற்றியதாகும். ஜாவா, பாலி, இந்தோனேசியா ஆகிய நாடுகளிலிருந்து சேமக்கலங்கள் போன்ற வாத்தியங்கள் பல இடம் பெற்றிருக்கின்றன. இந்தியாவிலிருந்து சாரங்கிகள், சித்தார்கள் ஆகிய கருவிகளும் இக் காட்சியில் காணப்படுகின்றன. சங்கீதக் கருவிகளின் வளர்ச்சி பற்றிய சகல விவரங்களையும் தெரிவிக்கும் 1300 புத்தகங்கள் கொண்ட நூலகமும் இத்துடன் நடத்தப்பட்டு வருகிறது. நீங்கள் படத்தில் காண்பது பிரம்ம தாளம் எனப்படும் வகையைச் சேர்ந்த சுமார் ஐம்பது வகைக் கருவிகள் கொண்ட 'கேமலம்' ஆர்கெஸ்ட்ராவைத்தான்.

மூனிச் மியூஸியம் இக் கருவிகளைச் சேகரித்து வைத்ததுடன் சும்மா இருந்து விடவில்லை. அந்தந்தச் சங்கீதக் கருவிகளை வாசித்தால் எப்பேர்ப்பட்ட இசை கிளம்புகிறது என்பதையும் ரிகார்டு செய்து வைத்திருக்கிறது. சங்கீத ஆராய்ச்சியாளருக்கு இந்தக் காட்சிசாலை பெரும் உதவியாக இருக்கும்.



புதியது

# ப்ரோடெக்ஸ் ஒரு சர்வ-காரிய டால்க். அது குடும்பத்தினர் அனைவருக்கும் மிகச்சிறந்தது.

"ப்ரோடெக்ஸ் எனக்கு விருப்பமானது. ஏனெனில் அது எந்தக் குடும்பத்திற்கும் ஏற்றபடி சிக்கனமானது"

"நாள் முழுதும் புதுமையுடனிருக்க நான் ப்ரோடெக்ஸையே விரும்புகிறேன்"

"எனது மிருதுவான சருமத்தைப் பாதுகாப்பதால் அம்மா ப்ரோடெக்ஸையே விரும்புகிறாள்"

ப்ரோடெக்ஸ் ஒரு உயர்ந்த ரக, மனோரம்மிய நறுமணமுடைய, சர்வ-காரிய டால்க். எல்லாக் குடும்பத்தினருக்கும், குளித்தபிறகும், கோடைக்காலத்தில் குளிர்ச்சிக்கும் மிகச் சிறந்தது. ப்ரோடெக்ஸ் வாங்குங்கள்-மிக மிகப்பெரிய டப்பா-மிகமிகக் குறைந்த விலை.




## ப்ரோடெக்ஸ்
ஆல்-பர்ப்பஸ் டால்கம் பௌடர்

PTP-8-7-TAM.







"எத்தனையோ நாளாக முயற்சி செய்கிறேன். இன்றும் தப்பாகி விட்டதே."

"இப்பொழுதெல்லாம் என்னால் எதையுமே சரியாகச் செய்ய முடியவில்லை. சீக்கிரமே களைத்துப் போகிறேன்."

"கவலையே படாதே, பிரேமா. தினந்தோறும் ரெண்டு கப் போர்ன்—விடா சாப்பிட்டுப் பார். அது மிகவும் நல்லதென்று எங்க டாக்டர் சொல்கிறார்."





"பிரமாதமான யோசனை! தினசரி இரண்டு கப்—ரொம்ப சீக்கிரத்தில குணம் தெரிகிறதே."

"இவ்வளவு காரியங்களையும் உங்க அம்மா தினசரி எப்படித் தான் செய்கிறாளோ?"

**இத்தனை சுறுசுறுப்பாக நான் என்றுமே இருந்ததில்லை**




## சக்திக்கும் வலிமைக்கும் BOURN-VITA

தயாரிப்பாளர்கள் : Cadbury's




2

பொய்கையார் பாடுகிறார் :

**ஒன்றும் மறந்தறியேன்**
**ஓதநீர் வண்ணனைநான்**

[ஒன்றும்—அவனுடைய கலியாண குணங்களில் ஒன்றையுமே. ஓதம்-ஓசை. ஓத நீர்-அலைகள் அடித்து ஓசை செய்யும் கடல். ஓதநீர் வண்ணனை-கடல் நிறக் கடவுளான திருமாலை.]

கடல் நிறக் கடவுளான எம்பெருமானுடைய வடிவழகும் குணநலனும் எதுவும் நான் மறந்தறியேன்.

**இன்று மறப்பனோ**
**ஏழைகாள் —**

[ஏழைகாள் — பேதைகளே.]

**— அன்று**
**கருஅரங்கத் துள்கிடந்து**
**கைதொழுதேன். கண்டேன்**
**திருஅரங்கம் மேயான்**
**திசை.**

[கரு அரங்கம் - கர்ப்ப ஸ்தானம். திரு அரங்கம் மேயான் - ஸ்ரீரங்கத்தை மேவிய பெருமானாகிய ரங்கநாதன். திசை - விஷயங்கள், தெய்வத்தன்மைகள்.]

அன்று கருவிலே கிடந்தபோதே இறைவனைக் கைதொழுதேன். அவனுடைய தெய்வாம்சங்கள் எதையும் மறந்தறியேன். இன்று மறந்துவிடுவேனோ? இல்லை என்கிறார் ஆழ்வார்.

**— அன்று**
**கருவரங்கத் துள்கிடந்து**
**கை தொழுதேன்**
**இன்று மறப்பனோ**

என்று அடிகளை மாற்றிப் படித்துப் பொருள் காண வேண்டும்.

கருப்பையில் குழந்தை கிடக்கும் நிலையே வணங்கிக் கைகூப்பிய நிலை. இதை மனத்திற் கொண்டு பாடலின் நயத்தைக் காண வேண்டும்.

கருவிலேயே பொருந்திய தெய்வத் தொடர்பு அது. உலகைக் காக்கின்ற மூர்த்தியாகிய திருமால் கருவிலேயே தனது கலியாண குணங்களைக் காட்டி என்னை ஆட்கொண்டு அருளினான். அவனை மறந்து விடுவேனோ என்று கேட்கிறார்.

'**கண்டேன் திசை**' என்பதற்குச் சாதாரண முறையில் 'திக்கு நோக்கித் தொழுதேன்' என்றும் பொருள் கொள்ளலாம்—கருப்பப் பையிலேயே திக்கு நோக்கித் தொழுத வாறு !

கருப்பப் பையில் திக்கு நோக்கித் தொழுத நான், இப்போது ஞானம் அடைந்து எம்பெருமானின் குணாதிசயங்களையும் உணர்ந்தபின் மறப்பேனோ என்ற கருத்தைக் கொண்டு பாடல் அமைந்திருக்கிறது !

ஒன்றும் மறந்தறியேன்
ஓதநீர் வண்ணனை நான்
இன்று மறப்பனோ
ஏழைகாள் — அன்று
கருவரங்கத் துட்கிடந்து
கைதொழுதேன் கண்டேன்
திருவரங்கம் மேயான்
திசை.

இனி, இந்தப் பாடலோடு சேர்த்து ஒப்பிட்டுப் பார்க்க வேண்டிய இன்னொரு பாடல் பூதத்தாழ்வாருடைய பாடல். அவர் பாடுகிறார்:

இன்று அறிகின்றேன்
அல்லேன்; இருநிலத்தைச்
சென்றுஆங்கு அளந்த
திருவடியை

[இரு நிலம் - பெரிய பூமண்டலம். சென்று ஆங்கு அளந்த திருவடி - தாவிச் சென்று வியாபித்த திருமாலின் பாதம்.]

உலகம் முழுவதையும் அளந்த அந்தத் திருவடியை இன்றுதானா அறிந்து கொண்டிருக்கிறேன்? இல்லை.

— அன்று
கருக்கோட்டி யுள்கிடந்து
கைதொழுதேன் கண்டேன்
திருக்கோட்டி எந்தை
திறம்.

[கருக்கோட்டி — கர்ப்பஸ்தானம். திருக்கோட்டி எந்தை - திருக்கோட்டியூரில் எழுந்தருளி யிருக்கிற என் அப்பனாகிய திருமால். திறம் - பெருமை, கலியாண குணங்கள்.]

இன்று அறிகின்றேன்
அல்லேன் இருநிலத்தைச்
சென்றுங்கு அளந்த
திருவடியை — அன்று
கருக்கோட்டி யுள்கிடந்து
கைதொழுதேன் கண்டேன்
திருக்கோட்டி எந்தை
திறம்.

இரண்டு ஆழ்வார்களும் முறையே இரண்டு திவ்விய ஸ்தலங்களையும் இரண்டு அர்ச்சாவதாரங்களையும் வைத்துப் பாடினார்கள்.

இறை யுணர்வு என்றும், தெய்வ ஞானம் என்றும் சொல்லப்படுகிற அறிவு, திருவருள் பெற்றவர்களுக்குப் பிறவியிலேயே கிடைக்கும் பாக்கியமாகும். சாதாரண மக்கள் உலக இச்சைகளில் மனத்தைச் செலுத்திச் செலுத்தி அந்தப் பிறவிச் செல்வத்தை இழந்து விடுகிறார்கள். பேரருள் படைத்தவர்கள் அவ்வாறு மறந்து விடாமல் "அன்று" போலவே "இன்றும்" ஞானம் மங்காதபடி அதைப் பேணிக் காப்பார்கள்.

---

கல்கியில் வெளியான 'அக்கரைச் சீமையில்' என்ற பிரயாண நூலுக்கான ஸாஹித்ய அகாதமியின் பரிசை நூலாசிரியர் ஸ்ரீ பீ. ப. சோமசுந்தரம் ('சோமு') அவர்களுக்கு வழங்குகிறார் நேருஜி. பிரதமருக்கு இடது புறம் அமர்ந்து உற்சாகத்தோடு கைத் தட்டுபவர் மத்திய அரசாங்கக் கலாச்சாரத் துறை அமைச்சர் ஸ்ரீ ஹுமாயூன் கபீர். நேரு அவர்களுக்குப் பின் புறம் முகத்தில் மகிழ்ச்சி பொங்க நிற்பவர் ஸாஹித்ய அகாதமியின் செயலாளர் ஸ்ரீ கே. ஆர். கிருபளானி. இந்தப் பரிசளிப்பு விழா மார்ச் 31ந் தேதி ஞாயிறு மாலை புதுதில்லி விஞ்ஞான பவனத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

சமீபத்தில் மயிலாப்பூர் ஸ்ரீனிவாச சாஸ்திரி ஹாலில் சிந்தனையாளர் மன்றத்தின் ஆதரவில் திரு சோமுவுக்குப் பாராட்டு விழா நடைபெற்றது. கல்வியமைச்சர் திரு பக்தவத்ஸலம் தலைமையில் பல அறிஞர்கள் பாராட்டுரை வழங்கினர். படத்தில், அமைச்சர் பக்தவத்ஸலம் அவர்கள் திரு சோமுவுக்குப் பொன்னாடை போர்த்திக் கௌரவிக்கிறார்.



# பாமாலிவ் லவண்டர்

## வசீகரிக்கும் நறுமணம்....

## பெருமிதத்தையும், அழகையும் அளிக்கிறது!




வசீகரம்...பாமாலிவ் லவண்டர் டால்கம்
பெருமிதத்திற்கும், அழகிற்கும் உற்ற நண்பன்.
சிறிது பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பின்மேல்
தூவிக்கொண்டால், அதன் இனிய நறுமணம்
உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள். பாமாலிவ்
உபயோகித்து எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும்,
நறுமணத்துடனும், அழகுடனும் விளங்குங்கள்.




பாமாலிவ் டீலக்ஸ்—மயக்கும்
17 செண்டுகளின் அற்புதமான கலவை!

PT-8-6-TAM-



வட ஆர்க்காடு ஜில்லா, திருப்பத்தூர் அட்வகேட் ஸ்ரீ B. செங்கய்ய ரெட்டி, B.A., B.L. அவர்கள் குமாரி செல்வி ராஜேஸ்வரிக்கும் ஜோலார்பேட்டை திரு சென்னகேசவலு ரெட்டியார் அவர்களின் குமாரன் செல்வன் மனோகரன், B.E., M.Sc. (Eng.) அவர்களுக்கும் சமீபத்தில் திருப்பத்தூரில் திருமணம் வெகு விமரிசையாக நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள்!

# அறிவுக் கனலே, அருட் புனலே!

ரா. கணபதி

சிவராத்திரித் திருநாள்.

குழந்தை கதாதரன் ஒட்ட ஒட்டப் பட்டினி கிடந்தான். 'அருள் நிதி தரவரும் ஆனந்த மலை'யான அப்பனைப் பற்றித் தீங்குரலில் துதித்து மகிழ்ந்தான். தர்மதாஸ் லாஹாவின் பிள்ளையும் கதாதரனின் அருமைத் தோழனுமான கயா விஷ்ணு முதலிய இன்னும் சிலரும் அன்று உபவாசம் இருந்தனர். இரவு முழுதும் சீதாநாதரின் வீட்டில் நடக்கப் போகும் சிவ பக்தி நாடகத்தைப் பார்த்துக் கண் விழிப்பது என்றும் அவர்கள் முடிவு செய்திருந்தார்கள்.

முதல் ஜாம பூஜையை முடித்துவிட்டு, சிவமாகிய சொக்கத் தங்கத்தை எண்ணிச் சொக்கியபடி அமர்ந்திருந்தான் கதாதரன். அவனுடைய நண்பர்கள் வந்தார்கள்.

நாடகம் பார்க்கக் கிளம்பினான் கதாதரன்.

''நீ நாடகம் பார்க்க வரவில்லை. நீயேதான் அதில் சிவபெருமானாக நடிக்க வேண்டும். ஏனென்றால் சிவனாக வேஷமிட இருந்தவருக்குக் காய்ச்சலாம். உனக்குத்தான் நல்ல நடிப்புத் திறமை இருக்கிறது. அதோடு இந்தக் குறைந்த அவகாசத்தில் சிவபெருமானுக்குரிய வசனத்தை மனப் பாடம் செய்து கொள்ள உன் ஒருவனாலேயே முடியும் என்பதால் இப்படி ஏற்பாடு பண்ணியிருக்கிறார்கள்'' என்றனர் அந்தத் தோழர்கள்.

கதாதரன் முதலில் மறுத்தான். தான் நடிக்கும் பட்சத்தில் வீட்டில் இரவு முழுதும் நடைபெறும் ஜாமபூஜைகளில் கலந்து கொள்ள இயலாதே என்பதால் ஆட்சேபித்தான். ஆனால் பெரியவர்கள் ''நீ சிவன் வேஷம் போட்டுக் கொண்டாலும் பகவானைத்தானே நினைத்துக் கொண்டிருக்கப் போகிறாய்?'' என்று சமாதானப்படுத்தினார்கள். கதாதரனும் ஒருவாறு இணங்கினான்.

கதாதரனுக்குச் சடை வைத்து ஜடாதரனாக்கினார்கள். அதில் இளமதியைப் பொருத்தி, அவனைச் சந்திர சேகரனாக்கினார்கள். அவனுடைய செவ்விய கழுத்தில் நீலக் கோடிட்டு அவனை நீலகண்டனாக்கி விட்டார்கள். அவன் உடலில் பாம்பு போலத் துணிகளைப் போட்டுப் புஜக பூஷணனாக்கினார்கள். இடையில் புலித்தோல் உடுத்தி அவனைக் கிருத்திவாஸனாக்கினார்கள். உடலெல்லாம் விபூதி பூசிய விபுவாகவும் ஆனான் கதாதரன்.

தன் வசமின்றி மேடையில் கதாதரன் மெல்ல மெல்ல வருவதைக் கண்ட போதே கூடியிருந்தவர்களுக்கு மயிர்க்கூச்செறிந்தது. தன்னுள்ளே நிரம்பி நிற்கும் சிவாநந்த ரஸம் துளும்பாமல் இருக்க வேண்டும் என்பதற்காகவே அவன் அப்படி மிருது நடை நடந்ததாகத் தோன்றியது. மேடைமேல் வந்து நின்றவன் நின்றபடியே இருந்தான்.

அவன் நாடகம் பார்க்க வேண்டாம்; நடிக்க வேண்டும் என்று அவனது நண்பர்கள் அழைத்து வந்தார்கள். ஆனால் அவனோ பரமசிவனாக நடிக்கவும் முடியாமல் சிவமாகவே ஆகிவிட்டான்.

அவன் பேச்சு எதுவும் பேசவில்லை. ஆனால் எந்தப் பேச்சிலும் காண முடியாத இனிமை அவனது மெல்லிய அதரங்களில் சாந்த நகையாகப் பரவியிருந்தது.

அவன் எதையும் பார்க்கவில்லை. ஆனால் நிலைத்து நின்ற அந்தக் கண்களில் எந்தப் பார்வையிலும் காணமுடியாத குளுமை நிறைந்து உருகி வழியலாயிற்று. கதாதரனின் வழுவழுப்பான கன்னங்களில் நீர் ஊற்று வழிந்தது. இனிப்பு நிறைந்த அதரங்கள் படபடத்தன.

கூடியிருந்தோரின் பக்தி உணர்வு கட்டு மீறிப் போயிற்று. சைவ வைஷ்ணவ பேதமறியாத கமார்புகூர் மக்கள், 'மஹா தேவ், மஹா தேவ்' என்றும் 'ஹரி, ஹரி' என்றும் கோஷித்தனர். பாட்டிமார்கள் 'உளு உளு, உளு' என்று தங்கள் நாட்டு வழக்கப்படி சத்தம் செய்தார்கள்! சிலர் சங்கநாதமும் செய்தார்கள்.

சிலர் கதாதரனிடம் ஓடினார்கள். அவன் கைகால்கள் மரத்துப் போயிருப்பதைக் கண்டு 'தண்ணீர் தண்ணீர்' என்று கத்தியவர்கள் சிலர். 'விசிறி விசிறி' என்று வேறு சிலர் பலமாக இரைந்தார்கள்.

சபையில் ஏகக் குழப்பமாகி விட்டது. நாடகம் அரைகுறையாக இருக்கும் போதே திரை விழுந்தது.

ஒரு சிலர் கதாதரனை அவனது வீட்டுக்குத் தூக்கிச் சென்றனர். குழந்தையை

அவர்கள் தூக்கி வரும் அந்தக் காட்சியைக் கண்டதும் சந்திராவுக்குச் சொரே லென்றது. அவன் உயிரோடுதான் இருக்கிறான் என்பதைப் புரிந்து கொள்ளவே அவளுக்குச் சிறிது பொழுதாயிற்று.

அன்றிரவு முழுவதும் கதாதரன் சிவ சாம்ராஜ்யத்திலேயே, சிவசாயுஜ்யத்திலேயே இருந்தான். மறு நாள் சூரியோதயத்துக்குப் பின்தான் கண்களை அலர்த்தினான்.

சந்திராவின் அகமும் அப்போது தான் அலர்ந்தது.

இதிலிருந்து கதாதரனுக்கு இது போன்ற பரவச நிலை அடிக்கடி கைகூடலாயிற்று. இதனை பாவசமாதி என்று கூறுவதுண்டு. 'தான் ஆண்டவனின் பக்தன்; அல்லது மைந்தன்; அல்லது நாயகி' என்பது போன்ற ஓர் உணர்வைத் தவிர வேறெந்த நினைவுமில்லாத நிலை இது. இதனை ஸவிகல்ப சமாதி என்றும் சொல்வதுண்டு. இதற்கும் மேலானது நிர்விகல்ப சமாதி. அப்போது ஆண்டவனும் தானும் ஒன்றியிருப்பதைச் சாதகன் அநுபவிப்பான்.

அழகு ஆர்ந்த இயற்கைக் காட்சிகளைக் காணும் போதோ, இன்னிசையைக் கேட்கும் போதோ, இறைவனின் திருநாமாவளிகளைக் கேட்கும்போதோ கதாதரன் பாவசமாதி அடைந்துவிடுவான். சிலை போல மாறி விடும் சிறுவனை அந்தச் சமயங்களில் வெளி உணர்வுக்குத் திருப்புவது பிரம்ம யத்தனமாகி விடும்.

உலகப் பிரக்ஞை பெற்றபின் கதாதரனிடம் அவனுடைய பரவசத்தைப் பற்றிக் கேட்டால், தான் ஈசுவரன் அல்லது அம்பிகையின் அருள்சொட்டும் திவ்விய மங்கள ரூபத்தைத் தரிசித்ததாகச் சொல்வான். முதலில் இதை யெல்லாம் கண்டு அஞ்சிய சந்திரமணியும் மற்றவர்களும் நாளாக ஆக அச்சத்தைவிட்டனர். ஏனெனில் இத்தகைய பரவச அநுபவத்தால் கதாதரனின் உடல் வளர்ச்சியோ, அறிவு வளர்ச்சியோ சிறிதும் பாதிக்கப்படவில்லை. மிகவும் சுறுசுறுப்புடனேயே செயலாற்றி வந்தான் அவன்.

கதாதரனுக்குத் தனது பரவசம் குறித்து என்றுமே பயம் இருந்ததில்லை. அதுவும் நாளாவட்டத்தில் அது அவனுக்குச் சர்வ சகஜமாகவும் ஆகிவந்தது. நினைத்த போது தெய்வ தரிசனம் பெறவும், அதேபோல அதனின்று பிரியவும் அவனால் இயன்றது.

என்ன என்ன ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. கடவுளைக் காண்பது என்பது எத்தகைய உன்னதமான அநுபவம்! தூய்மையும் உள்ளன்பும் இருந்துவிட்டால் ஈசுவர தரிசனமும் இவ்வளவு எளிதாகி விடும் போல் இருக்கிறது! ஆனால் தூய்மையையும், உள்ளன்பையும் பெறுவது எளிதாக இல்லையே!

''என் தந்தை பெற்ற தரிசனத்தை எனக்கும் தா'' என்று பாலன் கதாதரன் பிரார்த்தித்தபோது தனது இதயத்தின் அடிவாரத்திலிருந்து தரிசனத்துக்காக ஏங்கியிருக்கிறான். கடவுளைக் காண வேண்டும் என்று அந்தரங்கபூர்வமாக விரும்பியிருக்கிறான். அப்படிக் காண முடியும் என்று பரிபூரணமாக நம்பியிருக்கிறான். அப்படிப்பட்ட நம்பிக்கையும், கடவுளைக் காண வேண்டும் என்ற உண்மையான ஆர்வமும் நம்மில் யாருக்கு இருக்கின்றன? அந்த நம்பிக்கையும், ஆர்வமும் இருந்தால் நமக்கும் தயாளிந்து தரிசனம் தராமலிருக்க மாட்டான்.

நம்பிக்கை, ஆர்வம் இவற்றோடு அன்பு மிகவும் முக்கியமாகும். கடவுளிடம் நாம் அன்பு கொள்கிறோமா, அஞ்சுகிறோமா என்று சிறிது யோசித்துப் பார்த்தால் நாம் அஞ்சத்தான் செய்கிறோமே ஒழிய அன்பு கொள்ளவில்லை என்று தெரியும். இறைவன் நமக்கு உண்மையாகவே தரிசனம் தர வருவான் என்று ஒரு நிலை ஏற்படுமானால் நம்மில் பலர் அவனைக் காணப் பீதியே கொள்வோம். நம்முடைய பாபம்தான் இதற்குக் காரணம். ஒரு பாபமும் செய்யவில்லை என்று நம்மில் யாரேனும் சொல்லிக் கொள்ள முடியுமா? உலகுக்கெல்லாம் நீதி வழங்குபவன் பரமன் என்று எண்ணிப் பார்த்தால் நாம் அவனிடம் நமது பாபங்களுக்காகத் தண்டனை பெற வேண்டியவர்கள். இதனாலேயே போலும், நம்மையும் அறியாமல் நம்முடைய அல்பமான தெய்வ பக்தியில் அச்சமும் கலந்திருக்கிறது. பாபமறியாத பசும் பொற் பிள்ளையாகிய கதாதரனுக்கோ ஆண்டவனிடம் அச்சம் என்பது அணுவளவேனும் இல்லை. அப்பழுக்கற்ற அன்பு மட்டும்தான் அவனிடம் இருந்தது. அன்போடு, ஆர்வத்தோடு — அன்பே தகளியாய் ஆர்வமே நெய்யாய் — அவன் வேண்டினான். வேண்டியதைப் பெற்றான்.

மணிகள் தங்கத்தை அடைந்து அணிபணியாக அழகு பெறுவதுபோல், தெய்விக உணர்வுகள் கதாதரனை அடைந்து அவனை விளக்கித் தாமும் விளக்கம்பெற்றன. எழுத்தறிவு மூலம் பெற முடியாத பல விஷயங்களை கதாதரன் அறியலானான். இந்த அறிவு அவனுக்குப் பெரும் உற்சாகத்தை அளித்து வந்தது.

உற்சாகத்தின் உருவாகவே கதாதரன் ஊரில் நடக்கும் உற்சவங்களில் எல்லாம் பங்கு கொண்டான். கமார்புகூரில் ஹரி, சிவன், மானஸா என்ற தெய்வங்களுக்கு விழா நடக்கும். பொதுவாக அந்தக் கிராமவாசிகள் யாவரும் பேத புத்தியின்றி ஒற்றுமையாக வாழ்ந்தவர்கள். கதாதரன் எல்லாத் தெய்வங்களையும் சமரஸ புத்தியோடு, பக்தியோடு வழிபட்டு வந்தான்.

இப்போது கதாதரனுக்கு வயசு சுமார் பன்னிரண்டாகிறது. எனவே, எந்த விஷயமானாலும், அதன் நோக்கத்தைப் பற்றி அவன் சிந்திக்கத் தொடங்குகிறான். 'பள்ளிப் படிப்பின் நோக்கம் என்ன?' என்று யோசிக்கிறான். கடவுளைக் காண்பதல்ல என்று நிச்சயமாக அவனுக்குத் தெரிகிறது. பள்ளிப் படிப்புப் பெற்றிராத தன் தந்தை ஆண்டவனைக் கண்டதையும் நினைத்துப் பார்க்கிறான் அவன்.

அவன் அருட்புனலான பரமஹம்ஸ ராமகிருஷ்ணராகப் பிரவகிக்க வேண்டியவனாயிற்றே! ஜீவ நதிகள் சிறியதொரு ஊற்றிலோ, தடாகத்திலோ தொடங்குவதுபோல், பரமஹம்ஸராகிய அருட்புனல்தான் இப்போது கதாதரனாகிய பொய்கையாக இருக்கிறார். வயது முதிர்ந்து பிறரைக் காக்கும் போது அவருடைய மூலதனமாயிருந்தது அருள். அந்த அருளையே சிறுவன் கதாதரனிடம் அன்பு என்ற பெயரில் காண்கிறோம். இந்த அன்புக்கும், இனி தோன்றப் போகும் அருளுக்கும் எழுத்தறிவு எந்த விதத்தில் பயனாகும்? கதாதரனின் கேள்வியை நாம் எல்லாரும் கேட்டுப் பார்த்துக் கொள்ள வேண்டும். அதற்கான விடையே கதாதரனின் வாழ்க்கை.



பள்ளிப் படிப்பின் நோக்கம் லௌகிக முன்னேற்றம்தான் என்பதை உறுதியாக, இறுதியாக அறிகிறான் கதாதரன். மக்களில் தொண்ணூறு சதவிகிதத்தினர் இந்த லௌகிக முன்னேற்றத்துக்காகத்தான் வாழ்கிறார்கள்; கற்கிறார்கள் என்பதையும் ஐயம் திரிபறக் காண்கிறான். தான் அப்படி வியர்த்தமாக வாழப் பிறந்தவனல்ல என்று நிச்சயம் பெறுகிறான்.

சொத்து சேர்ப்பதால் உண்டாகும் தீமைகளையெல்லாம் கண் முன் தெளிவாகக் கண்டான் கதாதரன். ஏதுமற்ற ஆண்டிப் பரதேசிகள் கவலையும் பூசலும் இல்லாமல் வாழும் போது, கிராமத்தில் நிலபுலன் படைத்த அத்தனை பேரும் வழக்கு, வியாஜ்யம், வாய்தா என்று ஓயாமல் கச்சேரி வாசல் ஏறுவதைக் கண்டான் அவன். ஒரு குடும்பமாக இருந்தவர்கள் நாடா பிடித்துக் கொண்டு, 'இந்தப் பக்கம் என் நிலம்; அந்தப் பக்கம் உன் நிலம்' என்று பிரிவினை செய்து கொள்ளும் போதெல்லாம் கதாதரனுக்குச் சிரிப்புத்தான் வரும்.

கதாதரன் ராமகிருஷ்ணரானபின்பும் இதனை மறக்கவில்லை. "பகவான் இரண்டு சமயங்களில் சிரிக்கிறான். 'உன் உயிரை நான் காப்பாற்றித் தருகிறேன்' என்று வைத்தியர் சொல்லும் போதும், 'இந்த நிலம் என்னுடையது; அது உன்னுடையது' என்று மக்கள் பாகப் பிரிவினை செய்து கொள்ளும் போதும் பரமேசுவரன் நகைக்கிறான்" என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறியிருக்கிறார்.

சொத்து சேர்ப்பதற்கு மட்டும் உதவும் கல்வி சொத்தையானதுதான் என்பது கதாதரனின் திடமான முடிவு. "அரிசியையும் வாழைக் காயையும் மூட்டைகட்டத்தானே இந்தப் படிப்பு?" என்பான் அவன்.

பன்னிரண்டு வயசுப் பையனுக்கு இவ்வளவு விவேகம் இருந்திருக்குமோ என்று ஐயம் கொள்ள வேண்டாம். நாம் பன்னிரண்டாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தாலும் காண முடியாத தெய்வ தரிசனத்தைப் பெற்றவன் கதாதரன். அந்த ஆனந்தத்தின் முன்பு இக உலக இன்பங்கள் அவனுக்குத் துச்சமாகத் தோன்றியிருந்தால் அதில் வியப்படைய ஏதுமில்லை.

எனவே திரவியம் தேட மட்டுமே உபயோகமாகும் பள்ளிப் படிப்பை கதாதரன் விரும்பவில்லை. வங்காளி மொழியிலுள்ள ராமாயணம் பாரதம் முதலியவையே அவன் படித்த நூல்கள். அவன் தனது மதுரமான குரலில் பக்திமயமாக இந்நூல்களைப் படிப்பதைக் கிராம மக்கள் பலர் கூடியிருந்து கேட்டு மகிழ்வார்கள். எழுத்தறிவற்ற அந்த எளிய மக்களை மகிழ்விப்பதில் கதாதரனுக்கும் மகிழ்ச்சியுண்டாகும். பிரஹ்லாதன், துருவன் முதலிய பால பக்தர்களின் வரலாறுகளை இந்தப் பிஞ்சுப் பௌராணிகன் படிக்கும் போது அவர்களே தோன்றித் தமது சுய சரிதையைச் சொல்லிக் கொள்வது போல இருக்கும்.

யோகானந்தர், மதனமோஹனர் ஆகியோர் இயற்றியுள்ள பக்திக் கதைப்

பாடல்களை யெல்லாம் கதாதரன் மனப் பாடமாக்கிக் கொண்டான். சிலபாடல் களை அவன் புஸ்தகங்களிலிருந்தோ மூலப் பிரதிகளிலிருந்தோ எழுதி வைத்துக் கொண்டதுமுண்டு. யோகாத்யர், ஸுபாஹு ஆகியோர் இயற்றிய ராம கிருஷ்ணாயனம் என்ற காவியத்தை கதாதரனின் கையெழுத்திலேயே கமார் புகூரில் கண்டிருக்கிறார் குருமஹாராஜின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய ஸ்ரீ சாரதாநந்தர்.

கதாதரனுக்குப் பன்னிரண்டு பிராய மான போது அவனைவிடப் பத்து வயசு மூத்த ராமேசுவருக்குத் திருமணமா யிற்று. கதாதரனின் இளைய சகோதரி சர்வமங்களாவுக்கும் விவாகம் நடை பெற்றது.

இந்தச் சமயத்தில், நீண்ட நாட் களாகப் பிள்ளைப் பேறு வாய்க்கப்பெறா திருந்த பெரிய மன்னி கருத்தரித்தது வீட்டின் மகிழ்ச்சியை மிகுதியாக்கிற்று. ஆனால் அவளது வழக்கமான பிடிவாத குணம் இப்போது அதிகமாயிற்று. ஏனோ அவள் எல்லாரிடமும் எரிந்து விழலானாள். பூஜைக்கு முன்பே உண் பது போன்ற முறையற்ற பல காரியங் களை அவள் செய்தது சந்திரமணியின் உள்ளத்தைப் புண்ணாக்கியது. எல்லா ருடைய மனக் கசப்பையும் சம்பாதித் துக் கொண்ட அந்தப் பேதைப் பெண் ஆண்பிள்ளை ஒன்றைப் பெற்றுப் போட்டுவிட்டுக் கண்ணை மூடிவிட்டாள். வீட்டில் விசனமும் வேதனையும் சூழ்ந்தன.

ராமகுமாரின் மனைவி வீட்டில் அடியெடுத்து வைத்த போது அவ ளுடன் கபிட்சமும் அடியெடுத்து வைத் தது. அவள் போன பின், கபிட்சமும் அவ ளுடனேயே சென்று விட்டது. ஏனோ ராம குமாரைப் புரோஹி தத்துக்கு அழைப்பவர் களின் எண்ணிக்கை குறைந்து வந்தது. ஏதோ நாலு மணி அரிசி விளைந்து வந் ததே தவிர, தாயற்ற அநாதைப் பிள்ளைக் குப் பால் வாங்கக்கூட சிரமப்பட வேண்டியதாயிற்று. இதை யெல்லாம் கண்ட ராமகுமார் இனியும் தாம் கமார்புகூரில் இருப்பது சரி யல்ல என்று கருதினார். கல்கத்தா வுக்குச் சென்று சம்ஸ்கிருத பாட சாலை தொடங்குவது என்று முடிவு செய்தார். முப்பதாண்டுகள் தம்முடன் வாழ்ந்த மனைவியை ஓயாமல் நினை வுறுத்தி வேதனை தரும் அந்த வீட்டை விட்டு வெளியேறுவதே அவருக்கு ஓர் ஆறுதலாக இருக்கும் போலத் தோன்றி யது. தள்ளாமையிலும், துன்பத்திலும் அடிபட்ட சந்திரமணியிடம் பிரியா விடை கொண்டு ராமகுமார் கல்கத்தா வுக்குச் சென்றார். ஜமாபுகூரில் ஒரு சம்ஸ்கிருத பாடசாலை தொடங்கினார். சில தனிகர்களின் வீட்டில் அர்ச்சகராக வும் அமர்ந்தார்.

சந்திரமணிக்குக் குடும்பப் பாரத் தைத் தாங்குவது மிகவும் சிரமமாகி வந்தது. பேரக் குழந்தை அக்ஷயனை வளர்க்கும் பொறுப்பு வேறு அவள் மீது சுமந்திருந்தது. இளைய மாற்றுப் பெண் ணும் இன்னொரு குழந்தையாக இருந் தாள். எப்படியோ ரகுவீரனை நம்பி வீட்டுக் காரியங்களை ஒருவாறு நடத்தி வந்தாள் சந்திரமணி.

அவளுக்கு மிகவும் உதவியாக இருந் தது கதாதரனே. ராமகுமாரின் புரோ ஹித அலுவல்களைக் கவனித்து வந்த ராமேசுவர் கதாதரனின் போக்குகளைப் பற்றி எவ்வித கட்டுப்பாடும் செய்ய வில்லை. தன் இஷ்டப்படி அம்மாவுக்கு எடுபிடி செய்தும், தமையன் மகனைக் கொஞ்சி விளையாடியும், தனது புராண 'பிரவசன'த்திலும் பொழுதை ரம்மிய மாகச் செலவிட்டு வந்தான் கதாதரன். தினமும் சிறிது நாழிகை மட்டும் பள்ளியில் செலவிட்டு வந்தான்.

கதாதரன் வீட்டில் அதிகப் போது தங்கி இருந்ததால் அக்கம் பக்கத்துப் பெண்கள் அடிக்கடி அந் தக் காந்த சக்தி வாய்ந்த சிறுவனை நாடி வந் தார்கள். அவனைப்பாடச் சொல்லுவார்கள்; அவ







விடம் கதை கேட்பார்கள். அவன் ஏதாவது வீட்டு வேலையாக இருந்தால் அந்த வேலையைத் தாங்களே முடித்துக் கொடுத்து விட்டு அவனைப் பாடவும், கதை சொல்லவும் வைப்பார்கள். முனிவர்களுக்கும் கிட்டாத பேறு ஆயர் குலப் பெண்களுக்குக் கிருஷ்ணவதாரத்தில் கிடைத்தது. ராம கிருஷ்ணவதாரத்திலும் அது போலவே நிகழ்ந்தது. ஈகவரத்துவத்தைப் புரிந்து கொள்வதற்கு எளிமை ஒன்று போதும் என்பது மீண்டும் நிருபணமாயிற்று. பாகவதக் கதைகளையும் துதிகளையும் பாடுவான் பாலன். விருவிடை உருவில் அமைந்த பல வங்காள நாட்டுப் பாடல் களைக் கானம் செய்வான். சில சமயங்களில் முழு நாடகமே நடத்திக் காட்டி விடுவான் கதாதரன். நாடக பாத்திரங்கள் ஒவ்வொருவருக்கும் ஒத்த முறையில், தனது குரலை மாற்றிக் கொண்டு பலர் கூடி நடிப்பது போன்ற பிரமையை அந்தச் சுட்டிப் பிள்ளை உண்டாக்கி விடுவான். சந்திரமணி மனசு புழுங்கும் பல சந்தர்ப்பங்களில் கதாதரன் தனது நகைச்சுவை நாடகங்களால் அவள் துயரைத் துடைத்திருக்கிறான்.

வைஷ்ணவ குடும்பத்து மாதர்களுக்கு கதாதரனிடம் அபரிமிதமானதோர் ஆசை உண்டாயிற்று. அவனைப் பால கோபாலனாகவே அவர்கள் நினைந்து அன்பு செலுத்தினர்.

அதோடு மட்டுமின்றிப் பெண்மையின் மென்மை நிறைந்த அவனைப் பக்தியின் எல்லை நிலமாகிய ராதிகா தேவியாக எண்ணினர்.

அந்தப் பெண்கள் கதாயிக்கே பாவாடையும், தாவணியும் அணிவித்து, நகைகளால் அலங்கரித்து ராதையாக்கிப் பார்த்தார்கள். அந்தச் சமயங்களில், நிலவு பொழியும் விசித்திர சூரியனைப் போல அழகுப் பிம்பமாக விளங்குவானும் கதாதரன். (தொடரும்)

## அழகு ஒளிரும் அமைப்பு

### பொறி இயல் திறன் விளங்கும் வேலைப்பாடு




ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட், கல்கத்தா - 11

ASP/OGI-34





இம்மாதம் 7ந் தேதியன்று தஞ்சையில் ஸ்ரீ பங்காரு காமாக்ஷி யம்மனின் ஆலய கும்பாபிஷேகம் மகத்தானதொரு வைபவமாக நிகழ்ந்தது. இதனையொட்டி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளும் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளும் தஞ்சைக்கு விஜயம் செய்திருந்தனர். அவர்களுக்கு நகரம் அளித்த வரவேற்பையும் கும்பாபிஷேகக் காட்சிகளையும் காணலாம்.

செல் அரக்கனிடமிருந்து தம்மால் காப்பாற்றப் பட்ட செல்வமாகிய ஓலைச் சுவடிகளுடன் காணப் படும் தமிழ்த் தாத்தா திருவான்மியூரில் கோயில் கொள்ளப் போகிறார். மேலே: இந்த ஸ்தலத்தில் வான்மீக ரிஷி இறைவனை வழிபட்டமையால் திருவான்மியூர் அப்பெயரைப் பெற்றதாக ஸ்தல புராணம் கூறுகிறது. வலது பக்கம்: மௌன குருவாய் அமர்ந்து ஞானோபதேசம் செய்யும் தட்சிணாமூர்த்தி அழகிய சிலாவடிவமாகத் திருவான்மியூர் கோயிலில் குடி யிருக்கிறார்.

# தமிழ் வாழும் திருவான்மியூர்





மரர் கல்கி அவர்கள் ஒருமுறை எழுதினார்கள். ''தமிழ்த் தாத்தா! தமிழ் தா, தா!'' என்று. டாக்டர் உ. வே. சுவாமிநாதய்யர் அவர்களும் தமிழ் இலக்கியச் செல்வத்தை வாரி வழங்கினார்கள். அந்தச் செல்வத்தை அவர் எவ்வளவு அரும்பாடு பட்டுச் சேகரித்தார்! ஆயினும் இலக்கியப் பசி கொண்டிருந்த தமிழன்பர்களிடம் இரக்கம் காட்டிச் சற்றும் தயங்காமல் அள்ளிக் கொடுத்த வள்ளல் அவர். அவரால் தமிழ் வாழ்கிறது. தமிழிலே அவரும் வாழ்கிறார். இன்று ருஷ்யா, செகோஸ்லவாகியா, அமெரிக்கா போன்ற மேனாடுகளில் தமிழை, சர்வ கலாசாலைகளிலும் மாணவர்கள் பலர் ஆர்வத்துடன் பயிலுகிறார்கள். உடலின் பல பாகங்களுக்கும் ரத்தம் பாய்வதற்கு நெஞ்சில் உறையும் இருதயம் உயிர்த்துடிப்புடன் இயங்குவது போல், உலகின் பல பகுதிகளுக்கும் தமிழ் பரவினுலும் அதன் இருதயமாகத் திருவான்மியூரிலே அமையப் போகின்ற டாக்டர் உ. வே. சுவாமிநாதய்யர் நூலகம் திகழும்.

பிரும்மா முதல் எமன் வரையில் பல தேவர்கள் ஈசனை வழிபட்டதால் சிறப்பெய்திய இந்தப் புண்ணிய க்ஷேத்திரம் இனி கலாக்ஷேத்திரமாகவும் விளங்கப் போகிறது. கலைகள் பலவும் இறைவனுக்கே அர்ப்பணமாக வேண்டியவை என்ற உன்னத நோக்கத்தோடு ஸ்ரீமதி ருக்மிணிதேவி அவர்கள் நடத்திவரும் கலாக்ஷேத்திரமும் திருவான்மியூரிலேயே இப்போது அமைந்துள்ளது.

திருஞானசம்பந்தர் பாடியபடி,

'கான யங்கிய தண்கழி சூழ்கட லின்புறம்
தேன யங்கிய பைம்பொழில் சூழ்திரு
வான்மியூ'ரில்,



இயற்கை எழில் சூழ்ந்த பிரதேசத்தில் கலைகள் வளரக் கேட்கவா வேண்டும்

திருவான்மியூர் க்ஷேத்திரத்தில் இனி கலாக்ஷேத்திரமும் இடம் பெறுகிறது. வகுப்புக்களை நடத்துவதற்காக எளிய முறையில் அமைக்கப்பட்டுள்ள குடில்களை மேலே காணலாம். கீழே: திருவான்மியூரில் உள்ள சிதைந்த கோபுரமும் மீனவர் குடிசைகளும் கடற்கரையும்.



வலது பக்கம்: மயிலையில் அறுபத்து மூவர் உற்சவம் நடக்கும் தினங்களில் திருவான்மியூரிலும் பிரம்மோற்சவம் தெப்போற்சவம் ஆகியவை நடைபெறும். வீதி உலா இளம்புகையில் சுவாமியைத் தூக்குபவர்கள் இருபுறமும் மாறி மாறி அமர்ந்தும் எழுந்தும் நடப்பார்கள். இதனால் இறைவன் நடனமாடியபடியே வருவதாகத் தோன்றும்.







செல் அரக்கனிடமிருந்து தமிழ்த் தாத்தாவினுல் காப்பாற்றப்பட்ட செல்வங்களுள் ஒன்று ஜீவக சிந்தாமணி. அதிலிருந்து ஒரு காட்சியையே இவ்விதழ் அட்டைப் படத்தில் திரு மணியத்தின் வண்ண ஓவியமாகக் காண்கிறும்.

சச்சந்தன் என்னும் அரசனுக்குக் கட்டியங்காரன் என்பவன் மந்திரி. தீய நோக்கம் படைத்த அவன், அரசனைக் கவிழ்த்து ஆட்சி பீடம் ஏறத் திட்டம் இடுகிறுன். ஆனந்தக் கேளிக்கைகளில் மூழ்கியிருந்த மன்னன் கடைசியில் விழிப்புற்றுச் செய்வதறியாது திகைக்கிறுன்.

அப்பொழுது அவன் மனைவி விசயை கருவுற்றிருந்தாள். அவளாவது தப்பிப் பிழைக்கட்டும் என்று எண்ணி மன்னன் மயிற்பொறி (ஆகாய விமானம்) யில் அவளை அனுப்பி வைக்கிறுன். மயிற்பொறியில் உள்ள இயந்திரங்கள் தாமாக இயங்கக் கூடியவை. ஏறவும், இறங்கவும் அதில் இயந்திரங்கள் இருந்தன. அதில், ராசமாதேவி (விசயை) தனியளாகத் தப்பிச் செல்கிறுள்.

மயிற்பொறி ஓர் இடுகாட்டில் போய் இறங்குகிறது. அங்கே அவளுக்கு மகன் பிறக்கிறுன். அவன் பெயர் தான் ஜீவகன்— 'ஜீவக சிந்தாமணி' காப்பியத்தின் நாயகன்.





# வைத வாழ்த்து

கி.வா. ஜகந்நாதன்

"இது அம்பிகை மாலை."
"அப்படியே வையுங்கள்."
"இது நைடதம்."
"அதுவும் இருக்கட்டும்."
"இதோ அகத்தியர் தேவாரத் திரட்டு."
"அது இப்போது தேவை இல்லை."

திருநெல்வேலியில் ஒரு வீட்டில் நடந்து கொண்டிருந்த சம்பாஷணை இது. நான்கைந்து பேர் உட்கார்ந்திருக்கிறார்கள். அவர்களுக்கு முன் ஏட்டுச்சுவடிகளின் அடுக்கு ஒன்று இருக்கிறது. இரண்டு பேர் ஒவ்வொரு சுவடியாகப் பிரித்து அது இன்ன நூல் என்று சொல்லிக் கொண்டே வருகிறார்கள். அங்கே தமிழ்த் தெய்வம் முப்பத்திரண்டு பிராயமுள்ள ஆடவர் உருவத்தில், எல்லாரும் மரியாதையுடன் ஏவல் செய்வது போல் உடனிருந்து வேண்டியதைக் கவனிக்க அமர்ந்திருக்கிறது. அந்தத் தெய்வத்தின் கையிலும் ஏட்டுச் சுவடி இருக்கிறது.

மகாமகோபாத்தியாய தாட்சிணாத்திய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் என்று உலகம் புகழ வாழ்ந்து, தமிழ்த் தாயின் பழைய அணிகலன்களில் புதைந்து உருவழிந்து மங்கிக் கிடந்தவற்றை எடுத்து உருவாக்கி மெருகூட்டித் தமிழ்மக்கள் என்றும் குன்றா நன்றியறிவுடன் பாராட்டும்படி செய்த பெருமான்தான் அங்கே அமர்ந்திருக்கிறார்கள். அவர்கள் மேற்கொண்ட தமிழ்த் தொண்டு இப்போதுதான் தொடக்க நிலையில் இருக்கிறது. கும்பகோணம் அரசியலார் கல்லூரியில் வெறும் ஐம்பது ரூபாய் சம்பளம் வாங்கும் தமிழ்ப் பண்டிதர் அவர்கள். ஆனாலும் நினைத்ததெல்லாம் அளிக்கும் சிந்தாமணி போலத் தமிழ்க் கவிச் சுவை அறிபவர்களுக்குப் பல பொருள்களை அளிக்கும் சீவக சிந்தாமணி என்னும் காப்பியத்தை உருவாக்கி அச்சிட்ட முதற் புகழ் அவர்களை அடைந்திருக்கிறது. இன்னும் சங்க நூல்களைத் துலக்கும் தொண்டைத் தொடங்கவில்லை. சிந்தாமணிக்கு அப்புறம் பத்துப் பாட்டை வெளியிடலாம் என்ற எண்ணத்தோடு அவர்கள் ஏடு தேடும் யாத்திரையில் ஈடுபட்டிருந்தார்கள். கல்லூரி விடுமுறை நாட்களிலெல்லாம் அவர்கள் பழஞ்சுவடியைத் தேடிச் செல்லும் யாத்திரையைத் தொடங்குவார்கள். திருநெல்வேலிச் சீமையில் பரம்பரையாகப் புலவர்களாக இருந்த குடும்பங்கள் பல உண்டு. அவர்கள் வீடுகளில் ஏட்டுச் சுவடிகள் இருந்தன. பெரும்பாலும் அச்சிலுள்ள நூல்களும் தல புராணங்களுமே ஒவ்வொரு வீட்டிலும் இருந்தன. எங்கோ ஓரிரண்டு வீடுகளில் பழைய நூல்களிற் சில கிடைக்கும்.

ஐயரவர்கள் இந்த முறை திருநெல்வேலிப் பக்கம்தான் போனார்கள். 1887-ம் ஆண்டு அது. திருநெல்வேலியில் சிறந்த சைவ வேளாளக் குடும்பங்கள் பல உண்டு. திருவாவடுதுறை ஆதீனத்து அடியவர்கள் அவர்கள். அக்காலத்தில் அவர்கள் திருவாவடுதுறை வருவதும் அங்குள்ள ஞானாசிரியரைத் தரிசிப்பதும் சில நாட்கள் தங்கி அங்குள்ள புலவர்களோடும் அடியார்களோடும் கலந்து பழகி இன்புறுவதும் வழக்கம். அப்பொழுதெல்லாம் ஐயர் அவர்களுடன் பழகிப் பேசும் சந்தர்ப்பங்கள் கிடைக்கும். அதனால் அவர்களுடைய புலமையையும் நிலைமையையும் அந்த வேளாளச் செல்வர்கள் உணர்ந்து அவர்களிடம் மதிப்பு வைத்துப் பழகினார்கள்.

இவ்வாறு தமிழும் சைவமும் தம் இரண்டு கண்களென வைத்துப் பாதுகாத்து வந்த செல்வர்களில் அம்பலவாணக் கவிராயர் என்பவர் ஒருவர். மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களிடம் அவருக்கு ஈடுபாடு அதிகம். அவருடைய வழித்தோன்றல்களாகக் கவிராச நெல்லையப்ப பிள்ளை, கவிராச ஈசுவர மூர்த்திப்பிள்ளை என்ற சகோதரர்கள் இருவர் ஐயர் அவர்களிடம் அன்புடையவர்கள். "திருநெல்வேலிக்கு வந்தால் எங்கள் வீட்டில் உள்ள சுவடிகளைப் பார்க்கலாம். அயலிடங்களில் உள்ள சுவடிகளையும் பார்க்கும்படி செய்கிறோம்" என்று அவர்கள் சொன்னார்கள். "தங்கப் புதையலைத் திறந்து காட்டுகிறோம்" என்றால் நமக்கு எவ்வளவு ஆனந்தம் உண்டாகும்! அப்படித்தான் ஐயர் அவர்கள் உள்ளம் களிக்கூத்தாடியது.

பத்துப்பாட்டுக்கு நச்சினார்க்கினியர் உரை செய்திருக்கிறார். அதில் பத்து நெடும் பாட்டுக்கள் இருக்கின்றன. அவற்றில் முதலில் உள்ளதுதான் திருமுருகாற்றுப்படை. அது பதினோராந் திருமுறையில் சேர்ந்திருந்ததனாலும், பாராயண நூலாக இருந்ததனாலும் அது மட்டும் உயிரோடு இருந்தது. மற்ற ஒன்பது பாட்டுக்களும் இருந்த இடமே தெரியவில்லை. மகா வித்துவான் பிள்ளை அவர்களுடைய ஏடுகளில் ஒன்றில், மேலே பொருநராற்றுப்படை என்ற பெயர் இருந்தது. சீவகசிந்தாமணி உரையில் மேற்கோளாக வரும் சில அடிகள் அதில் இருந்தமையால் அது பழைய நூல் என்று உணர்ந்து அதை எடுத்து வைத்திருந்தார்கள்.

பத்துப்பாட்டில் உள்ள நூல்கள் இன்ன என்பதை ஒரு தனிப் பாட்டால் உணர்ந்து அவற்றின் பெயர்களை மாத்திரம் அறிந்திருந்தார்கள். பிள்ளை அவர்களின் ஏட்டுச் சுவடியில் பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப் பாட்டு, மதுரைக் காஞ்சி என்ற ஐந்து பாட்டுக்களே இருந்தன. அவற்றின் பின் இருக்க வேண்டிய நான்கு நெடும் பாட்டுக்கள் கிடைக்கவில்லை. அவற்றைத் தேடும் வேலையில் 1883-ம் ஆண்டு முதல் ஈடுபட்டிருந்தார்கள். இந்த நான்கு ஆண்டுகளில் சில ஏடுகள் கிடைத்தன. ஆனால் எல்லா ஏடுகளிலும் நச்சினார்க்கினியர் உரை மாத்திரம் இருந்ததே யொழிய மூலம் காணப்படவில்லை.

அந்த உரையாசிரியர், மூலத்தின் பகுதியைக் கொடுத்துப் பதவுரை எழுதியிருக்கிறார். அப்படி உள்ள மூலப் பகுதிகளை ஒன்றுசேர்த்து ஒரு வகையாக ஒழுங்குபடுத்திக் கொண்

டார்கள் ஐயரவர்கள். இன்னும் சில பாட்டுக்கள் கிடைக்கவில்லை; கிடைத்தவற்றுக்கு மூலமும் அகப்படவில்லை.

இந்த முறை திருநெல்வேலிக்கு வந்து அம்பலவாண கவிராயர் வீட்டு ஏடுகளைப் பரிசோதித்துக் கொண்டிருந்த போதுதான் முன்னே சொன்னபடி உரையாடல் நடந்தது.

இரண்டு பேர் உடனிருந்து ஏடுகளை எடுத்துப் பார்த்துப் பெயரைச் சொல்லிக்கொண்டு வந்தார்கள். ஐயரவர்கள் தாமும் ஏடுகளைப் பார்த்து வந்தார்கள். இப்போது வேண்டாம் என்று தோன்றியவற்றை ஒரு பக்கத்தில் வைக்கச் சொன்னார்கள். முக்கியமான நூல் என்று தெரிந்தால் அதைத் தனியே வைக்கச் சொன்னார்கள். இந்த இரண்டாவது வரிசையில் நாலைந்து சுவடிகளே ஏறின. அவற்றிலும் சிறப்பான நூல் என்று சொல்லும்படி ஒன்றும் இல்லை.

ஏதோ ஒரு சுவடியை ஐயர் அவர்கள் எடுத்தார்கள். ஒவ்வொரு சுவடியின் மேலும் அதன் பெயரை எழுதிய சீட்டை ஒட்டியிருந்தனர். இந்தச் சுவடியைக் கையில் எடுத்தவுடன் ''ஆஹா!'' என்று மகிழ்ச்சிக் குரலை எழுப்பினார்கள்.

''பத்துப்பாட்டுக் கிடைத்து விட்டதா?'' என்று அன்பர்கள் கேட்டார்கள். ஐயர் அவர்கள், ''இல்லை. இது வேறு ஒரு நூல். இருங்கள், பார்த்துச் சொல்லுகிறேன்'' என்று கூறி ஏட்டைப் பிரித்துப் பார்த்தார்கள். அவர்களுடைய முகத்தில் வாட்டம் பிறந்தது. சுவடியின் கடைசி ஏடு வரையிலும் திருப்பினார்கள். அப்புறம், ''இந்தச் சுவடியை ஆராய்ச்சி செய்ய வேண்டும்; இதைத் தனியே வையுங்கள்'' என்றார்கள்.

அந்தச் சுவடியின் மேல் **கொங்குவேண்மாக்கதை** என்று எழுதியிருந்தது. அந்தச் சுவடி ஆதியந்தம் அற்ற பரம்பொருளாகக் காட்சி அளித்தது. சுவடியின் முதலில் எண்பது ஏடுகள் காணவில்லை; 319-ம் ஏட்டுக்கு அப்புறம் ஏடுகள் இல்லை. முன்பு எண்பது ஏடுகள் இல்லை என்ற கணக்காவது தெரிந்தது. பின்னே எத்தனை ஏடுகள் போயின என்பதைத் தெரிந்து கொள்ள முடியவில்லை.

''என்ன நூல் அது? ஏதாவது உபயோகப்படுமா?'' என்று அன்பர்கள் கேட்டார்கள்.

''இது கொங்குவேண்மாக்கதை. நான் இது வரை பாராத நூல். இது அரைகுறையாக இருக்கிறது. படித்துப் பார்த்து இதன் தன்மையைத் தெரிந்து கொள்ள வேண்டும்.''

''இதில் என்ன புதுமை இருக்கிறது? இது ஏதோ கபிலை கதை என்பது போலத் தோன்றும் நூல்தானே?''

ஐயரவர்கள் சிறிது பேசாமல் இருந்தார்கள். பிறகு, ''இந்த நூலை ஒருவர் வைதிருக்கிறார். அதனால் இதற்குச் சிறப்பு'' என்றார்கள். உடன் இருந்தவர்களுக்கு அவர்கள் சொன்னது விளங்கவில்லை. மறுபடியும், ''திருநெல்வேலியில் இருந்த பெரிய புலவர் ஒருவர், துறவி, திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த பெரியவர் இதை வைது எழுதி யிருக்கிறார்'' என்று ஐயரவர்கள் சொல்லியும் அவர்களுக்குக் கருத்து விளங்கவில்லை. ஐயரவர்கள் மேலே சொல்லலானார்கள்... ''இலக்கணக் கொத்து என்ற அரிய இலக்கண நூலை நீங்கள் படித்திருப்பீர்களே. வட மொழியிலும் தென் மொழியிலும் நல்ல புலமை படைத்தவரும், திருநெல்வேலியில் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த சைவ மடத்தில் மடபதியாக இருந்தவருமாகிய சாமிநாத தேசிகர் என்பவர் இயற்றியது அது என்பதும் உங்களுக்குத் தெரிந்திருக்கும்.''

அன்பர்கள் ஐயரவர்கள் சொல்வதை ஆவலுடன் கேட்கத் தொடங்கினார்கள்.

''சாமிநாத தேசிகருக்குத் தொல்காப்பியம், திருக்குறள், திருக்கோவையார் என்ற மூன்று நூலிலும் அளவற்ற அன்பு. சைவ சாத்திரங்களிலும் பற்று மிகுதி. அவற்றுக்கு ஒப்பான நூல்கள் வேறு இல்லை என்பது அவருடைய உறுதியான கருத்து. அவற்றில் திருக்கோவையாரிடம் அவருக்கு இருந்த பக்தியும் ஈடுபாடும் சொல்லத் தரம் அன்று. அந்தப் பெரியவர் இலக்கணக் கொத்தை இயற்றி அதற்கு உரையும் தாமே எழுதியிருக்கிறார். இலக்கணக் கொத்திலுள்ள சூத்திரங்களைவிட அதன் உரைதான் மிகவும் சிறப்பானது. இலக்கணத் துறையில் சாமிநாத தேசிகருக்கு இருந்த ஆழமான புலமையும் விரிவான ஆராய்ச்சித் திறனும் அந்த உரையினால் விளங்குகின்றன. அந்த உரையில்தான் இந்த மூன்று நூல்களையும் போற்றி யிருக்கிறார். வேறு சில நூல்களைத் தூற்றியும் இருக்கிறார்.''

''ஏன் தூற்றினார்? எந்த நூல்களைத் தூற்றினார்....?''

''நான் இப்போது தேடி வரும் பத்துப் பாட்டைக் கூட அந்த வரிசையில் வைத்திருக்கிறார். உங்களிடம் இலக்கணக் கொத்துப் புத்தகம் இருக்கிறதா? ஆறுமுக நாவலர் அவர்கள் பதிப்பித்திருக்கிறார்களே!'' என்றார்கள் தமிழ்ப் பேராசிரியர் அவர்கள்.

அதை எடுத்து வந்தார்கள். ஐயரவர்கள் ஓரிடத்தைப் பிரித்துக் காட்டினார்கள். அங்கே: ''மாணிக்கவாசகர் அறிவாற் சிவனே என்பது திண்ணம்; அன்றியும் அழகிய திருச்சிற்றம்பலம் உடையார் அவர் வாக்குக்கு அலந்து இரந்து அருமைத் திருக்கையால் எழுதினர். அப்பெருமையை நோக்காது சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, சங்கப் பாட்டு, கொங்குவேண்மாக் கதை முதலியவற்றோடு சேர்த்து ஒன்றாக்குவர்....'' இதைப் படித்த போது, ''ஓஹோ! இங்கேதான் கொங்குவேண் மாக்கதை வருகிறதா? பத்துப் பாட்டை அவர் இழிவாகக் கூறவில்லையே!'' என்றனர் உடன் இருந்தவர்கள்.

''கொஞ்சம் பொறுங்கள்; மேலே படிக்கிறேன். கேளுங்கள்'' என்று இலக்கணக் கொத்தில் உள்ளதை மறுபடியும் தொடர்ந்து படித்துக் காட்டினார்கள்.

'நன்னூல், இன்னூல், அகப்பொருள், காரிகை, அலங்காரம் முதலிய இலக்கணங்களையும், பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க் கணக்கு, இராமன் கதை, அரிச்சந்திரன் கதை முதலிய இலக்கியங்களையும் ஒரு பொருளாக எண்ணி வாணாள் கழிப்பர். அவர் இவைகள் இருக்கவே அவைகளை விரும்புதல் என்னெனின், பாற்கடலுட் பிறந்து அதனுள் வாழும் மீன்கள் அப்பாலை விரும்பாது வேறு பலவற்றை விரும்புதல் போலும் அவரது இயற்கை என்க.'

# தலைவலி யிலிருந்து துரிதமாகவும்

'ஆஸ்ப்ரோ' அடிக்கும் உணர்ச்சியிருந்த நரம்புகளை அடைந்து வலியைத் துரிதமாக நிண்மையாய் சமனப்படுத்துகிறது. பல்வலி, முதுகுவலி, மாதவிடாய் நோவுகள், தொண்டைப்புண், நரம்புவலி, மற்றும் இதர வலிகளும் நோவுகளுங்கூட 'ஆஸ்ப்ரோ'வின் அபாயமற்ற செயல் திறனால் குணமாகின்றன.

'ஆஸ்ப்ரோ'விலுள்ள தீவிர சக்திப்பொருள் மற்றெதையும்விட அபாயமில்லாமல் வலியைப் போக்கக்கூடியது என மருத்துவக்கலை நிரூபித்துள்ளது. 'ஆஸ்ப்ரோ'ஒரு தூய மருந்து என்பதால் உலகெங்குமுள்ள லக்ஷக்கணக்கான நோயாளிகளுக்கு அரித நிவாரணமளிக்க வைத்தியர்களால் தினந்தோறும் உபயோகிக்கப்படுகிறது. 'ஆஸ்ப்ரோ' எந்தவித அபாயகரமான மருந்துகளும் கலவாதது. ஆகவே நீண்டகாலம் அபாயமின்றி உபயோகிக்கக்கூடியது.

'ஆஸ்ப்ரோ' லக்ஷக்கணக்கானவர்கள் உபயோகிக்கும் குடும்ப மருந்து—உலகிலேயே அதிகம் விற்பனையாகும் வலி நிவாரணி. 'ஆஸ்ப்ரோ'வை எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள்.

## பூரணமாகவும் நிவாரணம் பெற

# 'ஆஸ்ப்ரோ'




### 'ஆஸ்ப்ரோ' வேலைசெய்யும் மூன்று விதங்கள்



**பொடியாகப் பிரிதல்:**



**பரவுதல்:**



**நிவாரணம்:**

# 'ஆஸ்ப்ரோ'

## எவ்வகையிலும்

## அபாயமற்றது — சிறந்தது

ஒரு நிக்கோலஸ் N தயாரிப்பு

தூய்மைக்கும் தரத்திற்கும் நீங்கள் பெறும் உத்திரவாதம்.

A.B. 150.TAM

இந்தப் பகுதியைப் படித்துக் காட்டிவிட்டு, ''இவ்வாறு அவர் எழுதிய நூல்களில் பழைய சங்க நூல்கள் சேர்ந்திருக்கின்றன. கொங்கு வேண்மாக்கதை என்பதும் இந்த வரிசையில் இருப்பதால் அதுவும் பழைய நூல் என்று தெரிகிறது. கொங்குவேள் என்பவரைக் கதாநாயகராக வைத்துப் பாடிய காவியமாக இருக்குமோ, என்னவோ தெரியவில்லை. இதுவும் முழு ஏடாக இல்லை. வேறு ஏடு கிடைத்தால் ஆராய்ந்து இன்ன நூல் என்று கண்டு பிடிக்கலாம். ஆண்டவன் திருவருள் துணை செய்ய வேண்டும்'' என்று சொல்லி மேலே சுவடிகளைப் பார்க்கத் தொடங்கினார்கள்.

அப்போது கிடைத்த கொங்குவேண்மாக் கதைச் சுவடியை ராமபாணப் பூச்சி பதம் பார்த்துப் பல இடங்களில் துளை போட்டிருந்தது. அதோடு ஏடு குறைவாகவும் இருந்தது. பின்பு தேடியதில் திருநெல்வேலியைச் சேர்ந்த வண்ணார்பேட்டையில் இருந்த திருப்பாற்கடல் நாதன் கவிராயர் வீட்டில் ஓர் ஏடு கிடைத்தது. அதிலும் கொங்குவேண்மாக் கதை என்ற சீட்டு இருந்தது. உள்ளே பிரித்துப் பார்த்தால், எங்கெங்கே பிரதியில் ராமபாணப் பூச்சி அரித்திருந்ததோ, அங்கெல்லாம் இடம் விட்டு எழுதியிருந்தது. முதல் ஏட்டைப் பூச்சியார் அரித்ததைக் கண்டு, விஞ்சி விடுமே என்ற அச்சத்தால் உடனே பிரதிபண்ணியது இந்த இரண்டாவது பிரதி என்று தெரிந்தது.

ஊருக்கு வந்து கொங்குவேண்மாக் கதையைச் சொல்லிப் பார்த்தார்கள் ஐயரவர்கள். அகவல் பாட்டாலான நூலென்று தெரிந்தது. சிலப்பதிகாரம் இன்னும் அச்சாக வில்லை. ஆனாலும் அதையும் பிரதி செய்து இடையிடையே பார்த்து வந்தார்கள். அதில் அடியார்க்கு நல்லார் ஓரிடத்தில் ''கூத்தியர் இருக்கையும் கற்றியதாகக் காப்பிய வாசகம் கலந்தவை சொல்லி'' என்ற அடிகளை மேற்கோள் காட்டியிருந்தார். அந்த அடிகள் கொங்குவேண்மாக் கதைச் சுவடியில் இருந்தன. ''இது பழைய உரையாசிரியர்கள் மேற்கோளாக ஆளும் சிறந்த நூல்'' என்ற எண்ணம் ஐயரவர்களுக்கு உண்டாயிற்று. மேலும் அடியார்க்கு நல்லார் உரையைப் பார்க்கையில் அந்த அடிகள் உதயணன் கதையில் வருவன என்றும், அது இடைச் சங்க காலத்து நூல்களை யெல்லாம் ஆராய்ந்து செய்ததென்றும், அவ்வுரையாசிரியர் எழுதியிருந்ததைக் கண்டார்கள். பின்னும் ஆராய்ச்சி செய்த போது அந்த நூல் கதை என்றும், பெருங்கதை யென்றும், உதயணன் கதை என்றும் உரையாசிரியர்கள் வழங்கும் பழைய நூல் என்று தெரிய வந்தது. அதனை இயற்றியவர் கொங்குவேள் என்னும் சிற்றரசர். வடமொழியில் துர்விநீதன் இயற்றிய பிருகத் கதையின் மொழிபெயர்ப்பாக இருக்கலாம் என்று தோன்றியது. ஆனால் அந்த மூலநூல் இப்போது அழிந்து விட்டது.

இந்த அரைகுறைப் புத்தகத்தை ஆராய்ந்து வடமொழியில் உள்ள உதயணன் வரலாறு கூறும் நூல்களையும் ஆராய்ந்து ஒருவாறு கதை முழுவதையும் தெரிந்து கொண்டார்கள். அற்புதமான காவியம் இது என்பதை உணர்ந்து கொண்டார்கள். பல ஆண்டுகளின் ஆராய்ச்சிக்குப் பின் 1924ம் ஆண்டு பெருங்கதையை அச்சிட்டு வெளியிட்டார்கள்.

திருநெல்வேலியில் அன்று 'கொங்குவேண் மாக்கதை' என்ற சீட்டையும் ஏட்டையும் கண்டவுடன் இலக்கணக் கொத்துக்காரர் எழுதியது நினைவுக்கு வந்திரா விட்டால் அந்தச் சுவடியை எடுத்து வைத்திருக்க மாட்டார்கள். இலக்கணக் கொத்தின் ஆசிரியர் இகழ்ந்து எழுதினாலும், அது இந்த நூலை நினைவுபடுத்த உதவியது. இதைப் பற்றி ஐயர் அவர்கள் பெருங்கதை முகவுரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள்; ஸ்ரீ சாமிநாத தேசிகர் வெறுத்துக் கூறிய வாக்கியப் பகுதி அப்பொழுது ஞாபகத்துக்கு வரவில்லையேல் இந்நூலை வாங்கி வைத்துக் கொள்ளுவதற்கு இடம் இல்லை. அவர் வைதது இந்நூலுக்கு வாழ்த்தாக முடிந்தது. பெரியோர்களால் செய்யப்படும் அவமதிப்பும் கௌரவம் உடையதாகும் என்பது திண்ணம்!

இவ்வாறு அவர்கள் தேடித் தொகுத்த ஏடுகளும், குறித்த குறிப்புக்களும் இப்போது அடையாற்றில் உள்ள டாக்டர் சாமிநாதையரவர்கள் நூல் நிலையத்தில் இருக்கின்றன. அந்த நிலையத்தினர் தமிழாராய்ச்சியையும் தமிழ் நூற்பதிப்பையும் நடத்திவருகிறார்கள். திருவான்மியூரில் அதற்காக ஒரு பெரிய கட்டடம் எழுப்பும் வேலை நடந்து வருகிறது. தமிழ் மக்கள் அந்த அறிவுக் கலைக் கோயில் எழுந்து தமிழ் நாட்டுக்குப் பயன்படும் வகையில்பொருளுதவி செய்வார்கள் என்று நம்புகிறேன்.

---



**அடுத்த இதழில்**

பட்டம் தரும் புட்டிப்பால்
சிறப்புக் கட்டுரை



எல்லைப்புற நாடுகள் — ஸிக்கிம்



மறக்க முடியாத திரைப்படங்கள்
அசோக்குமார்



மே மாதத்திய
நெடுங் கதை
வெனிஸ்
ஓவியன்
சோழ எழுதுகிறார்





# போகிற போக்கில்..

சிட்டுக்குருவி

கடந்த பத்து ஆண்டுகளில் இரண்டாயிரம் கோடி ரூபாய் செலவழித்தும் விவசாயத் துறையில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட வில்லை — உற்பத்தி எதிர்பார்த்தபடி பெருக வில்லை என்று திட்ட மந்திரி வருத்தப்படுகிறார். இந்தக் குறைபாட்டைக் கேட்ட அரசாங்கம் ஏன் இப்படி ஏற்பட்டது என்று அறிய ஒரு விசாரணைக் கமிட்டியை ஏற்பாடு செய்யப் போவதாகவும் அது மாகாணங்களில் சுற்றி வரும் என்பதாகவும் ஒரு செய்தி கூறுகிறது. இந்த லட்சணத்தில் திட்டத்தின் 'வெற்றி'களைப் பற்றி எப்படித்தான் மந்திரிகள் பேசுகிறார்களோ புரியவில்லை.

ஃ ஃ ஃ

"சீனத் தாக்குதலுக்குப் பிறகு உங்கள் நடுநிலைமைக் கொள்கை மாற்றம் கண்டிருக்கிறதா?" என்று ஸ்ரீமதி இந்திரா காந்தியிடம் நியூயார்க்கில் நிருபர்கள் கேட்டிருக்கிறார்கள். இதற்கு ஸ்ரீமதி இந்திரா காந்தி "இல்லை—உலகக் கொள்கைதான் மாற்றம் கண்டிருக்கிறது" என்று கூறியிருக்கிறார். இதன் பொருள், உலகம் மாறினாலும் நேருஜி தம் கொள்கையை மாற்ற மாட்டார் என்பது. இந்தப் பதிலைப் பார்த்ததும் ஒரு கதை நினைவுக்கு வருகிறது.

ஜால வித்தைக்காரர் ஒருவர் திடீரென்த் தம் கூடாரத்தைப் பிரித்துக் கொண்டு இன்னொரு ஊருக்குக் கடையைக் கட்டினார். "ஏன் இப்படி செய்கிறீர்கள் — ஜால வித்தைகளை நிறுத்தி விட்டீர்களா?" என்றார் ஒருவர்.

"நான் தொழிலை விடவில்லை. ஆனால் என் தொழிலைப் பார்க்க வருகிற மக்கள்தான் தங்கள் அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டு இனி வருவதில்லையென முடிவு செய்து விட்டனர்" என்றார்.

இந்தியா கொள்கையைக் கைவிடவில்லை. ஆனால் உலகம்தான் கொள்கையை மாற்றி வருகிறது என்று ஸ்ரீமதி காந்தி சொல்லுகிறார்.

ஃ ஃ ஃ

"வீறு கொண்டு எழக் கீதையைப் படியுங்கள்" என்று பாதுகாப்பு மந்திரி திரு சாவன் குருக்ஷேத்திரத்தில் பேசியிருக்கிறார்.

"கீதையைப் படிப்பதாவது — ஐந்தாண்டுத் திட்டத்தைப் படித்தால் போதாதா?" என்று டில்லி மந்திரிகள் திரு சாவன் மீது கோபப்படுவார்கள் என்று கூறப்படுகிறது. இது உண்மையாக இருக்கலாம். ஏனெனில் காசி ராமேசுவரம் இப்போது க்ஷேத்திரங்களல்ல — அணைகளும் கால்வாய்களும் தொழில்கூடங்களும்தான் க்ஷேத்திரங்கள் என்று ஐந்தாண்டுத் திட்ட மூலவர் முன்பே பேசியிருக்கிறாரல்லவா? அதைப் பின்பற்றி இப்போது கீதையைப் பற்றி இப்படி மறுப்புத் தெரிவிக்கலாம்.

ஆனால் இதில் ஒரு துர்ப்பாக்கியம் இருக்கிறது. பக்ரா நங்கல் அணைக்கட்டு இருக்கிறதே அந்த நவீன க்ஷேத்திரத்தில் ஒரு வெடிப்பு காணப்படுகிறதாம். ஆறு மைல் நீளத்துக்குப் பக்ரா அணைக்குக் கிழக்குப்புறத்தில் இருந்த ஒரு ரஸ்தா தண்ணீரில் மூழ்குகிறதாம். இந்த ரஸ்தாவை ஒட்டியிருந்த குன்றுகள் நாளுக்கு நாள் அமுங்குகின்றனவாம். பாஞ்சால சட்டசபையில் திரு ராமசந்திரா என்னும் காங்கிரஸ் அங்கத்தினரே புகார் கூறிப் பிரச்னையைக் கிளப்பியிருக்கிறார். சபாநாயகர் நீர்ப்பாசன மந்திரியை இது சம்பந்தமாக அறிக்கை கொடுக்குமாறு கூறியிருக்கிறாராம்.

## ...தாய், சேய் இருவரும் மிக நலமாயுள்ளனர்...

...ல்ஸானா-டி யின் நற்பயனே. கருவுற்றிருக்கையில் தாயிடம் கால்சியம் மிகையாகச் செலவாகி விடு...றது. தாயிடமிருந்துதான் குழந்தையின் எலும்புகள், நகங்கள் இவற்றின் வளர்ச்சிக்கான கால்சியம் ...பாய்ச் செல்கிறது...அதனால் அவளிடத்தில் கால்சியம் பற்றாக்குறை ஏற்படுகிறது. அவளுக்கும் அவள் ...ழந்தைக்கும் வேண்டிய கால்சியத்தைச் சரிக்கட்டி வைக்க, இந்தப் புத்திசாலியான அன்னை வைட்ட...ின் சிறப்புறச் சேர்ந்த கால்சியம் கொண்ட கல்ஸானா-டியை உட்கொண்டு வந்தாள். கால்சியம் ...ற்றாக் குறையை நிவர்த்திக்க கல்ஸானா-டி முற்றிலும் சரியான மருந்தென வருடக்கணக்...ான சோதனைகளினால் நிரூபணமாகி, ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. கல்ஸானா-டியினால் ...ாய், சேய் இருவரும் மிக நலமாயுள்ளனர்.




# கல்ஸானா-டி

**வைட்டமின் தீவிரச் சேர்க்கையுடைய கால்சியம்**

கர்ப்பிணிகள், குழந்தையை அரவணைக்கும் அன்னைகள் மற்றும் வளரும் குழந்தைகள் இவர்களுக்கு ஏற்றது

JR.MD.79 TAM.

# அறிவிப்பு

## தி ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா

1963 ஏப்ரல் முதல் தேதியிலிருந்து

தனது

# டெபாஸிட் வீதங்களை

மாற்றி அமைத்துள்ளது

மாற்றி அமைக்கப்பட்ட விகிதங்கள் வருமாறு:

| | |
|---|---|
| சேவிங்ஸ் பாங்க் கணக்குகள் | — ஆண்டுக்கு 3 % |
| சேவிங்ஸ் பாங்க் டெபாஸிட் கணக்குகள் | — ஆண்டுக்கு 3¼% |
| பிக்சட் டெபாஸிட்டுகள் 6 மாதங்களுக்கு | — ஆண்டுக்கு 3½% |
| பிக்சட் டெபாஸிட்டுகள் 12 மாதங்களுக்கு | — ஆண்டுக்கு 4 % |
| பிக்சட் டெபாஸிட்டுகள் 24 அல்லது 36 மாதங்களுக்கு | — ஆண்டுக்கு 4½% |

அவசர (Call) டெபாஸிட்டுகளும் மற்றும் இதர குறுகிய கால டெபாஸிட்டுகளும் முற்றிலும் சகாயமான வீதங்களில் ஏற்றுக் கொள்ளப் படுகின்றன.

## தி ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா

நாடெங்கும் விரிவாக உள்ள 1000க்கு மேற்பட்ட தனது அலுவலகங்கள் மூலம் நாட்டிற்குப் பணியாற்றுகிறது.

உங்கள் டெபாஸிட்டு தேவைகள் பெரியதோ அல்லது சிறியதோ எதுவாயினும் அருகிலுள்ள ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா அலுவலகம் தனது டெபாஸிட் வசதிகளைப் பயன்படுத்திக் கொள்ளுமாறு உங்களை அழைக்கின்றது.

## ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா

இந்தியாவின் தலைசிறந்த பாங்க்

Sita's-SB-97

# 'ஹேஸலின்' டால்க்

**மழமழப்பான வெல்வெட் போன்ற பவுடர்!** நீலம்-வெள்ளை-மற்றும் பொன்னிறமான, 'ஹேஸலின்' டப்பாவை எடுத்துக்கொள்ளுங்கள். அதிலுள்ள மழமழப்பான வெல்வெட் போன்ற வெள்ளைப் பவுடரை உங்கள் சருமத்தின் மேல் தூவிக்கொள்ளுங்கள். ஆகா, எத்தனை சொகுசான பராமரிப்பு உங்களுக்கு! என்ன குளுமை! என்ன புதுமை! எத்தனை நறுமணம்! எல்லாம் 'ஹேஸலின்' டால்கின் அருள். வியந்து பாராட்ட வேண்டிய பொருள்!

**ஒரு பர்ரோஸ் வெல்கம் தயாரிப்பு**



BWY-9 TAM.

# பொன் விலங்கு



மணிவண்ணன்

## பதினைந்தாவது அத்தியாயம்

'இந்த வீட்டில் நீங்கள் மட்டுமே எடுத்து வாசிப்பதற்குரிய பரிசுத்தமான வாத்தியம் ஒன்று உங்களுக்காகவே காத்துக் கிடக்கிறது' என்ற மோகினியின் வாக்கியம் சத்தியமூர்த்தியின் இதயத்தில் ஆழமாகப் பதிந்து கிடந்தது. அவளுடைய நீர் பெருகும் விழிகளைக் காணும் போதெல்லாம் 'ஒரு தூரத்து நண்பருக்கு' என்ற தலைப்பில் தொகுக்கப் பெற்றிருக்கும் கவி பைரனின் ஆங்கிலக் கவிதை ஒன்றை நினைவு கூர்ந்தான் அவன்.

'நாம் இருவரும் சந்தித்துப் பிரிந்தபோது கண்ணீரும் அமைதியுமே இருந்தன' என்று ஆரம்பமாகிற அந்தப் பாடல், 'கண்ணீராலும் அமைதியாலுமின்றி இதை நான் எப்படி வரவேற்க முடியும்?' என்ற கேள்வியோடு முடியும். 'வென் வி டு பார்ட்டெட்—இன் சைலன்ஸ் அண்ட் டியர்ஸ்' என்ற ஆரம்ப வரிகளும் 'ஹௌ ஷுட் ஐ கிரீட் — தீ வித் சைலன்ஸ் அண்ட் டியர்ஸ்' என்ற இறுதி வரிகளும் அதே கவி வடிவத்தோடு அவன் இதயத்தில் மீண்டும் மீண்டும். பதிந்து உறைக்கிற ஞாபகமாகச் சுழன்றன. பொன்னுக்கும் பொருளுக்கும் கடன்படுவதைவிடத் தூய்மையான அன்புக்கு அதிகமாகக் கடன்பட வேண்டிய தன் அவசியம் இப்போது அவனுக்குப் புரிந்தது. ஊருக்குப் போவதைப் பற்றி இரண்டு வார்த்தை சொல்லிக் கொண்டு போகலாம் என்று வந்த இடத்தில் அன்புக்குக் கட்டுப்பட்டு அதிக நேரம் உட்கார்ந்துவிட்டதை உணர்ந்தான் அவன். எந்த இடத்தில் பிறரை வெற்றி கொள்ள முடிந்த தூய்மையான அன்பு பிறந்து பொலிந்து நிற்கிறதோ அந்த இடத்தில் மனிதனுடைய பிடிவாதம் தோற்றுப் போய் விடுகிறது என்பது உண்மைதான். மோகினியின் அன்பு சங்கீத விநாயகர் கோவில் தெருவிலிருந்த அந்தச் சிறிய வீட்டில் பிடிவாதமாக அவனைப் பிடித்து உட்கார வைத்து விட்டது. முதலில் அந்தத் தெருவிற்குள் நுழைவதற்கே அவன் கால்கள் கூசின. அப்புறம் அந்த வீட்டிற்குள் நுழைவதற்கு அவன் கால்கள் தயங்கின. இறுதியில் அந்தத் தயக்கத்தையும் அவள் வென்றாள். இருள் தூங்கும் கூந்தல் அவிழ்ந்து பெருக — அப்படிப் பெருகும் எல்லையிலாப் பேரழகுக்கு ஒரு தடையிட்டுக் கட்டினாற் போல் பட்டு ரிப்பனால் கட்டி அந்தக் கருமை வெள்ளத்தின் அலைகளுக்குள்ளிருந்து

தானே பூத்துச் சரிந்தது போன்ற ஒரு கொத்துப் பூவோடும் புன்னகை பூத்த முகத்தோடும் அவள் வந்து நின்றபோது அவனும் தன்னை மறந்து நின்று விட்டான். மோகினி என்று அவளுக்கு இசைவாகப் பெயர் வைத்தவர்களை மறு முறையும் இதயபூர்வமாக வாழ்த்தினான் அவன். வாசலில் நின்றது, இருந்தது, தயங்கியது, உள்ளே போய் உட்கார்ந்தது, சிற்றுண்டி காப்பி அருந்தியது, பேசியது எல்லாம் 'நானா இப்படிச் செய்தேன்?' 'நானா இப்படிச் செய்தேன்?' என்று அவன் தன்னைத் தானே நம்பி ஒப்புக்கொள்ள முடியாத காரியங்களாக இருந்தன. 'நான் எப்படி இவ்வாறு நெகிழ்ந்தேன்?' என்று அவன் தன் இதயத்தைத் தானே கேட்டுச் சோதித்துக் கொள்ளவும் முடியாதபடி மனமே அந்த நெகிழ்ச்சியை விரும்பி அதன் பக்கமாகச் சாய்ந்திருந்தது. அப்போது அவர்கள் இருவருக்கும் நடுவே கண்ணீரும் மௌனமுமே நிரம்பி யிருந்தன. 'கண்ணீராலும் மௌனத்தாலும் அல்லாமல் இதை நான் வேறு எந்த விதமாக ஏற்றுக் கொள்வேன்?' என்ற கவி பைரனின் கவிதை வரிகளைத்தான் அவனால் மீண்டும் சிந்திக்க முடிந்தது. அவளோ அவனுடைய இதயத்தின் நெகிழ்ச்சியை இன்னும் அதிகப்படுத்தும் படியான வேறொரு வேண்டுகோளுடன் நின்றாள்:

''நீங்கள் ஊருக்குப் போவதற்கு முன் நான் உங்களை இன்னொரு முறை சந்தித்து மனம் விட்டுப் பேச வேண்டும்.''—சொற்களால் பேசுவதைவிட நீர் பெருகும் கண்களாலும், மௌனத்தாலுமே அதிகமாகத் தன் அந்தரங்கத்தைப் பேசினாள் அவள். மௌனத்தினாலும், வெறும் பார்வையினாலுமே சாமர்த்தியமாகப் பேசத் தெரிந்தவர்களுக்குச் சொற்களால் பேசுவதா பெரிய காரியம்? ஆனால் சொற்களால் பேசுவதற்கு ஒன்றுமே மீதமில்லாததைப் போல் அப்போது அவர்கள் இருவருமே மௌனத்தால் மட்டும் பேசிக் கொண்டிருந்தார்கள். ஒரு நல்ல பூவுக்கு அதன் நிறமும் மணமும் சேர்ந்தே அழகாயிருப்பதைப் போல் துயரமும் மகிழ்ச்சியும் பாதி பாதியாகக் கலந்த மௌனமாயிருந்தது அது. ஒருவருக்கொருவர்—முகத்துக்கு முகம் இமையாமல் பார்த்துக் கொண்டிருந்த அந்தப் பார்வையில் தனியான மகிழ்ச்சியும் இல்லை; தனியான துயரமும் இல்லை. இரண்டுமே கலந்திருந்தது. எந்த விதமாகக் கலந்தால் அழகோ அப்படியே கலந்திருந்தது.

அந்த அழகிய மௌனத்தைச் சத்திய மூர்த்திதான் முதலில் கலைத்தான்:

''நீங்கள் அன்று சித்திரைப் பொருட்காட்சியில் ஆண்டாள் நடனத்துக்குப் பின்னால் சில சில்லறை நடனங்களை ஆடினீர்களே; அவற்றை எனக்குப் பிடிக்கவில்லை. பரத நாட்டியத்துக்குத் தொடர்ச்சியாக இவற்றை ஆடும்போது பரத நாட்டியத்தின் கௌரவத்தையே இவை கெடுத்து விடுகின்றன. நல்ல மரம் வளர்ந்த பின் அதைச் சில புல்லுருவிகளும் பற்றிப் படர்வது போல் ஒவ்வொரு கலையும் தான் வளரும் போது தன்னைச் சுற்றித் தன் மேல் இப்படிச் சில களைகளையும் வளர விட்டுவிடுகிறது. கலைகளின் தரத்தைக் காக்க விரும்புகிறவர்கள் இந்தக் களைகளைக் களைய வேண்டும்.''

''உண்மைதான்! எனக்கும் அப்படிப்பட்ட சில்லறை நடனங்களைப் பிடிக்கவில்லை. எனக்கு இதைக் கற்றுக் கொடுத்த வாத்தியார் அடிக்கடி, 'இந்தக் கலை வெறும் தெருக் கூத்து இல்லையம்மா! இது சரசுவதியோட இலட்சணம்' என்று சொல்வார். 'நீ கால்களிலே சலங்கையைக் கட்டிக் கொண்டு மேடையேறி ஆடும் போது உன்னால் ஆளப்படுகிற கலை எதுவோ அந்தக் கலையின் அழகுதான் மக்களைக் கவர வேண்டுமே ஒழிய உன் உடலின் அழகு மட்டுமே மக்களைக் கவர்ந்து நீ ஆள்கிற கலையின் அழகு மக்களைக் கவர்வதற்குத் தவறிவிடக் கூடாது. அப்படித் தவறினால் அது பூப்பொட்டலத்தைச் சுற்றி வைத்திருந்த இலையைக் கூந்தலில் வைத்துக் கொண்டு பூவைத் தூர எறிவது போல் நோக்கம் பிறழ்ந்த கலையாகி விடும்' என்றும் வாத்தியார் அடிக்கடி சொல்லுவார். உயர்ந்த தரத்துக் கலையைத் தெருக் கூத்தாக மாற்றிக் கேவலப்படுத்தக் கூடாது என்பதுதான் என் அபிப்பிராயம். ஆனால் நான் எந்தக் கலையை ஆள்கிறேனோ அந்தக் கலையை என் விருப்பப்படி ஆள முடியாமல் அம்மாவும் கண்ணாயிரமும் ஏதேதோ வியாபாரத் திட்டம் போடுகிறார்கள்.

இந்த நூற்றாண்டின் சமூக வாழ்க்கையில் யார் பெரிய ஆராய்ச்சியாளன் தெரியுமா? நல்லவர் கெட்டவர் பிரித்துக் கண்டுபிடிக்கத் தெரிந்தவன்தான் பெரிய ஆராய்ச்சியாளன். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அப்படிப் பிரித்துக் கண்டுபிடிக்கத் தெரிந்தவர்கள் நம்மிடையே மிகவும் குறைவாயிருக்கிறார்கள்.

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டமில்லாததுதான்.



**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹேயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மென்ட் K-2 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ், பீசாம் (இந்தியா) பிரை. லிட்., பீசாம் ஹவுஸ், மாஹிம், பம்பாய்—16.

# Silvikrin

சில்விக்ரீன்—கேச ஆரோக்கியத்துக்கான வழி



**ப்யூர் சில்விக்ரீன்**

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**




உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது

அதுதான் சொன்னேனே; பல வகையான காரணங்களால் நான் நினைக்கிற உயரத்துக்கு மேலே ஏறிப் போய் என்னால் வாழ முடியாமலிருக்கிறது. மனத்தினால் மட்டும்தான் நான் வாழ்கிறேன்.''

அவள் முகத்தையே பார்த்திருந்த சத்தியமூர்த்திக்கு அப்போது அவள் கூறியவற்றையெல்லாம் நம்பாமல் இருக்க முடியவில்லை. இரயிலில் முதன் முதலாக அவளைச் சந்தித்த தினத்தன்று அந்த இரவில் அவளுக்கும் அவள் தாய்க்கும் நிகழ்ந்த உரையாடலைச் சத்தியமூர்த்தி இப்போது நினைவுகூர்ந்தான். அவளுடைய மன நிலையும், அவளைச் சுற்றியிருக்கும் சூழ்நிலையும் அவனுக்கு விளங்கின: ''அக்கா! படங்களுக்குப் போடறதுக்கு மல்லிகைப்பூ மாலை வந்திருக்கு.....'' என்று பூக்காரன் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போன கூடையோடு சிறுவன் உள்ளே வந்தான். மோகினி அந்தக் கூடையை வாங்கி மாலைகளைப் பிரித்தாள். திடீரென்று அந்த வீட்டுக் கூடமே மிகப் பெரிய மல்லிகைத் தோட்டமாகிப் பூத்துக் குலுங்குவது போல் நறுமணம் கமழ்ந்தது. அங்கிருந்த சிறிய ஸ்டூல் ஒன்றைச் சுவர் ஓரமாக நகர்த்திப் போட்டுக் கொண்டு ஒவ்வொரு படத்துக்காக மாலையைச் சூட்டலானாள் மோகினி. அவளுடைய கைகள் அந்தச் சிறுவனிடமிருந்து மாலையை வாங்கிச் சூட்டும் நளினத்தைச் சத்தியமூர்த்தி கவனித்துக் கொண்டிருந்தான். அவன் உட்கார்ந்திருந்த இடத்துக்கு மேலே பின்புறத்துச் சுவரில் ஒரு முருகன் படம் மாட்டியிருந்தது. அந்தப் படத்துக்கு அவள் மாலையைச் சூட்ட வந்தபோது மட்டும் வசதியாக நின்று கொண்டு அவள் மாலையைச் சூட்டுவதற்குத் தான் இடையூறாக இருக்கலாகாது என்ற எண்ணத்தினால் சத்தியமூர்த்தி எழுந்து விலகி நின்றான். படத்துக்கு மாலையைச் சூட்டி விட்டுத் தான் கீழே இறங்கிய பின்பும் அவன் விலகி நின்று கொண்டிருப்பதைப் பார்த்து விட்டு, ''நீங்கள் உட்காரலாம். ஏன் நிற்கிறீர்கள்?'' என்று அவள் நாற்காலியைச் சுட்டிக் காட்டினாள். பழையபடி உட்கார்ந்தான் அவன். அப்படி உட்கார்ந்த மறுகணமே அந்த ஆச்சரியம் நிகழ்ந்தது. மேலே யிருந்த படத்தின் ஆணிகளில் சரியாகப் பதியாததனாலோ என்னவோ, முருகன் படத்திலிருந்த மாலை அப்படியே கழன்று 'இந்த இடத்தில் இப்படித்தான் விழ வேண்டும்' என்று சொல்லி வைத்து விழுந்தாற் போலச் சத்தியமூர்த்தியின் கழுத்தில் வந்து விழுந்தது. ஒரு சிறிதும் எதிர்பாராதபடி நேர்ந்த இந்த நிகழ்ச்சியால், ஏன் அடையவேண்டும் என்று புரியாத ஒரு விதமான அதிர்ச்சியும் அதே ரீதியில் அடைந்த ஒரு விதமான மகிழ்ச்சியுமாகப் பதறிக்கொண்டே அந்த மாலையை அவன் கழற்ற முற்பட்டபோது, இரண்டு பூங்கரங்கள் அவனுடைய கைகளைப் பற்றிக் கொண்டு அந்த மாலையை அவன் கழற்ற விடாமல் தடுத்தன. ''கழற்றாதீர்கள். இப்படியே இந்தக் கோலத்தில் உங்களைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் போல ஆசையாயிருக்கிறது'' என்று உணர்வு நெகிழ்ந்த குரலில் அவள் அவனை வேண்டிக்கொண்டாள். ஆயினும் அவள் கைகளைத் திமிறிக் கொண்டு அந்த மாலையை அவசரம் அவசரமாகக் கழற்றி வைத்து விட்டான் அவன். அப்படிக் கழற்றி வைத்து விட்டாலும், அந்த இடத்தில் இன்னும் அந்த மாலையோடு சேர்ந்து அவன் எப்படித் தோன்றுவானோ அப்படியே தோன்றுவதாகப் பாவித்துக் கொண்டு பார்ப்பதைப்போல் அவனையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டு நின்றாள் மோகினி.



''நான் புறப்படுகிறேன். நேரம் அதிகமாகி விட்டது'' என்று மெல்ல எழுந்தான் சத்தியமூர்த்தி.

''நீங்கள் புறப்படுவது இருக்கட்டும். என்னுடைய வேண்டுகோள் என்ன ஆயிற்று? ஊருக்குப் போவதற்கு முன்

உங்களை நான் இன்னொரு முறை பார்க்க வேண்டும் என்றேனே?...."

"அவசியம் பார்த்தாக வேண்டுமோ?"

"அதில் சந்தேகமென்ன? நீங்கள் இங்கிருந்து புறப்படுமுன் கண்டிப்பாக உங்களை இன்னொரு முறை சந்தித்தாக வேண்டும்."

எதற்காக அந்தச் சந்திப்பை அவள் வேண்டுகிறாள் என்பதைப் புரிந்து கொள்ள முயல்கிறவனைப் போலச் சத்தியமூர்த்தி அவளுடைய முகத்தைக் கூர்ந்து நோக்கினான். அவள் அந்தப் பார்வைக்கு நாணி ஒசிந்து போய்ப் புன்னகை புரிந்தாள்.

"நீங்கள் இவ்வளவு வற்புறுத்திச் சொல்கிறபோது நான் எவ்வாறு மறுக்க முடியும்? ஊருக்குப் புறப்படுகிறதற்கு முன்னால் மறுபடியும் உங்களைப் பார்த்து விட்டுப் போக முயல்கிறேன்" என்று கூறி அவளிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டான் அவன். மோகினியும் அந்தச் சிறுவனும் வாசற்படி வரையில் உடன் வந்து அவனை வழியனுப்பினார்கள். மிகுந்த நேரம் அதிக சிரத்தையோடு உட்கார்ந்து பேசிப் பழகி ஆறுதலும் அநுதாபமும் கூற வேண்டிய ஓர் உறவை வேகமாக மறுத்துக் கொண்டு புறப்பட்டு விட்டாற் போன்ற உணர்ச்சி தான் அப்போது அவனுக்கு இருந்தது. படத்திலிருந்து தவறி விழுந்த மாலையைக் கழுத்திலிருந்து கழற்ற விடாமல் தடுத்த அவளுடைய பட்டுக் கைகள் இன்னும் தன் தோள்களிலேயே பதிந்து இருப்பது போல் உணர்ந்தான் அவன். குமரப்பனுடைய அறை இருக்கிற இடத்துக்குப் போகிற வரை அவன் மதுரையின் வீதிகளில் நடந்து போனான் என்பதைவிட நிகழ்ந்தவை என்ற இனிய ஞாபகங்களின் மேல் மிதந்து, நிகழ இருப்பனவற்றுக்கு ஓர் அவசரத்தைப் படைத்துக் கொண்டு போனான் என்பது தான் பொருந்தும். மனத்தில் குழப்பமோ சிக்கலோ இல்லாமல் தெளிவான எண்ணங்கள் ஓடும் போது நடையும் ஓட்டமாக இருப்பது சத்தியமூர்த்தியின் வழக்கம். எண்ணங்களில் சூடேறிச் சிந்தனையோடு நடந்து போகிற பல சமயங்களில் நடப்பதே ஞாபகமில்லாமல் பறந்திருக்கிறான் அவன். இன்றும் அப்படிப் 'பறந்து' போய்த்தான் அவன் குமரப்பனுடைய அறையை அடைந்திருந்தான். அவன் போகும் போது குமரப்பன் ஏதோ ஒரு கார்ட்டூன் படத்துக்காகப் பென்சில் வரை படம் (ஸ்கெட்ச்) போட்டுக் கொண்டிருந்தான். கால் மணி நேரம் அப்படியும் இப்படியுமாகக் கோடுகள் இழுத்து அழித்த பின், "இந்தப் பாழாய்ப் போன பிரமுகர்...வாழ்க்கையில்தான் சரியான வழிக்கு வராமல் திமிறித் திமிறிப் போய்க் கொண்டிருக்கிறார் என்றால் படத்திலுமா அப்படி இருந்து தொலைக்க வேண்டும்? நானும்தான் அரை நாழிகையாகக் கோடிழுத்துப் பார்க்கிறேனடா சத்யம்! ஒரு கோட்டிலுமே பிடிபடாமல் நழுவிக் கொண்டிருக்கிறார் இவர்" என்று கூறிச் சரியாக வராத அந்தக் கார்ட்டூனைத் தூக்கி எறிந்தான் குமரப்பன்.

"சரி! நாம் புறப்படலாம் வா.... இந்தப் பிரமுகரைக் கொஞ்சம் விட்டுப் பிடிக்கலாம். திரும்பி வந்த பிறகாவது இவர் வழிக்கு வருகிறாரா என்று பார்க்கிறேன்" என்று கையில் இருந்த பென்சிலையும் அந்தக் காகிதத்தின் மேல் வெறுப்போடு வீசி விட்டுச் சட்டையை மாட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டான் குமரப்பன். நண்பர்கள் இருவரும் கீழ வாசலுக்குப் போய் அம்மன் சந்நிதி முன்புறம் உள்ள சில துணிக் கடைகளில் படியேறி இறங்கினார்கள். துணிமணிகளை வாங்கிக் கொண்டு அவர்கள் சந்நிதி முகப்பில் நடந்தபோது கோவிலுக்குள் போவதற்காகக் கண்ணாயிரம் காரில் வந்து இறங்கிக் கொண்டிருந்தார். நெற்றி நிறையத் திருநீறு துலங்க மார்பில் சட்டையோ, பனியனோ இல்லாமல் பளபளவென்று மின்னும் ஒரு பட்டு அங்கவஸ்திரத்தை இழுத்துப் போர்த்திக் கொண்டு பரம பக்தராகக் கோவிலுக்குள் நுழைந்து கொண்டிருந்தார் கண்ணாயிரம்.

"பார்த்தாய் அல்லவா?" என்று சிரித்துக் கொண்டே குமரப்பனைக் கேட்டான் சத்தியமூர்த்தி.

"ஆகா! பார்க்காமல் விடுவேனா? தாராளமாகப் பார்த்தேன். நாயன்மார்களும், ஆழ்வார்களும் — பக்திக்குக் கவசமாயிருந்து அந்த நல்லுணர்வைக் காத்தார்கள். இந்தக் காலத்திலோ ஒழுக்கமும் நேர்மையுமின்றி வாழும் சிலருக்குக் கூடத் தங்களைக் காத்துக்கொள்ளும் ஒரு கவசமாகப் பக்தி பயன்படுகிறது: அவர்கள் பக்திக்குக் கவசமாக இருந்து அதைக் காத்தார்கள் என்றால் இவர்கள் பக்தியை ஒரு கவசமாக அணிந்து தங்களைக் காத்துக் கொள்ளப் பார்க்கிறார்கள்."

"சரியாகச் சொல்லி விட்டாய், குமரப்பன்! நம்மைச் சுற்றியிருக்கும் மனிதர்கள் எல்லாரிடமும் கடுமையாகவும், முறையின்றியும் நடந்து கொண்டே தெய்வத்தினிடம் மட்டும் எளிமையாகவும், பணிவாகவும் நடந்து கொள்வதாகப் பாவிக்கிறவர்களைத் தெய்வம் எப்படி மன்னிக்க முடியும்?"

''மன்னிப்பதால் பெருமைப்படலாம். ஆனால் மாற்றியமைப்பதால் மட்டுமே திருப்திப்பட முடியும். கண்ணு விரத்தைப் போல் பொய்யாக வாழ்கிற வர்களும் பக்திக் கோலம் பூண்டு பரம பக்தராகக் கோவிலுக்கு வருகிறார்கள். இதய பூர்வமான பக்தியைத் தவிர, வேறு எந்தக் காணிக்கையையும் சுமந்து கொண்டு வர முடியாத பல்லாயிரம் ஏழைகளும் கோயிலுக்கு வருகிறார்கள். கோவிலுக்கு வருவதைக் காரணமாக வைத்தும் சமூகத்தில் நல்லவர்-கெட்டவர்களைப் பிரித்துக் கண்டுபிடிக்க முடியாமல் இருக்கிறது பார்த்தாயா? இந்த நூற்றாண்டின் சமூக வாழ்க்கையில் யார் பெரிய ஆராய்ச்சியாளன் தெரியுமா? நல்லவர் கெட்டவர் பிரித்துக் கண்டு பிடிக்கத் தெரிந்தவன்தான் பெரிய ஆராய்ச்சியாளன். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அப்படிப் பிரித்துக் கண்டுபிடிக்கத் தெரிந்தவர்கள்நம்மிடையே மிகவும் குறைவாயிருக்கிறார்களடா சத்தியம்!''

''இந்த நூற்றாண்டில் சமுதாயத்தின் பொதுவான சொத்து எதுவாயிருக்கிறது என்று பார்த்தால் பெரிய ஊர்களில் பரவலான கோழைத்தனமும் சிறிய ஊர்களில் பரவலான முரட்டுத்தனமும்தான் நிரம்பிக் கிடக்கின்றன. அப்படியிருக்கும்போது நல்லது கெட்டது தெரிகிறவர்கள் குறைவாயிருப்பதில் ஆச்சரியம் என்ன?'' என்று குமரப்பனை எதிர்த்து விவாதம் செய்தான் சத்தியமூர்த்தி. இருவரும் பேசிக்கொண்டே அந்திக் கடைப் பொட்டலுக்கருகே மீனாட்சி பூங்காவுக்குள் போய் உட்கார்ந்தார்கள். சத்தியமூர்த்தி தன் நண்பனிடம் மனம் உருகிக் கூறலானான்:

''இனிமேல் இப்படி நாம் ஒருவருக்கொருவர் சந்தித்துப் பேசிக் கொள்ளும் வாய்ப்புக்கள் இல்லாமற் போய் விடுமே? எப்போதாவது கல்லூரி விடுமுறைகளின் போது நான் மதுரைக்கு வந்தால்தான் உண்டு. ஊரைப் பிரிந்து போவதைவிட உன்னைப் பிரிந்து போவதுதான் எனக்குப் பெரிய வேதனை குமரப்பன்! மூயன்றால் வாழ்வதற்குத் தேவையான வசதிகள் எல்லா இடத்திலும் கிடைத்து விடும். ஆனால் மனம் விட்டுப் பழகுவதற்குச் சத்தியமான நண்பர்கள் எல்லா இடத்திலும் கிடைக்க மாட்டார்கள்.''



''கவலைப்படாதே, சத்யம்! கடிதங்களால் சந்தித்துப் பேச முடியும் நாம். நான் அன்று ஒரு நாள் சித்திரைப் பொருட் காட்சி முடிந்து திரும்பிய போது கூறியது உனக்கு நினைவு இருக்குமென்று எண்ணுகிறேன். வழி உண்டாக்கிக் கொண்டு நடக்கிறவனுக்கு எங்கே போனாலும் நல்ல நண்பர்கள் காத்துக் கொண்டிருப்பார்கள்'' என்றான் குமரப்பன்.

''ஆயிரம் சொல், குமரப்பன்! நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். உன்னைப் போல் இன்னொரு நண்பன் எனக்குக் கிடைப்பான் என்று இனி நான் எதிர் பார்க்க முடியுமா? நீ மிகவும் அதிசயமானவன்....''

''அதெல்லாம் பெரிதாகச் சொல்லிப் புகழாதே. இப்படி இன்னும் எத்தனை அதிசயமானவர்களைச் சந்திக்கப் போகிறாயோ? வாழ்க்கையில் ஒவ்வொரு பெரிய அநுபவமும் அதற்கு முந்திய அநுபவங்களை ஞாபகத்தில் மங்கச் செய்து விடுவது வழக்கம். என்னுடைய நினைவையும் மங்கச் செய்து விடும்படியான பெரிய அநுபவங்கள் உன் வாழ்க்கையில் இனி ஏற்படாது என்பது என்ன நிச்சயம்? வாழ்க்கையில் போகப் போக அநுபவங்கள் முடிச்சுப் போடுவது போலத்தான் இருக்கும்போதே முந்திய முடிச்சைத் தளர்த்தி விட்டு இருக்கும். என் அநுபவத்தில் பலமுறை இதை நான் உணர்ந்திருக்கிறேன். அத்தகைய பெரியஅநுபவங்களை நீ அடைய அடையக் 'குமரப்பன்' என்ற கார்ட்டூனிஸ்ட்டை மறந்தாலும் மறந்து விடுவாய்!........!..யார் கண்டார்கள்?''

''அப்படிச் சொல்லாதே, குமரப்பன்! உன்னை மறக்கக் கூடாதென்பது என் தவம். அது ஒரு போதும் வீணாகாது'' என்று சத்தியமூர்த்தி உறுதி தொனிக்கும் குரலில் நண்பனிடம் கூறினான். மறு நாளும் மாலையில் நண்பர்கள் இருவரும் சந்தித்து நெடு நேரம் பேசினார்கள். அதற்கு அடுத்த நாளும் பேசினார்கள். சத்தியமூர்த்தி ஊருக்குப் புறப்படும் நாள் நெருங்க நெருங்க அவர்கள் சந்தித்துப் பேசும் நேரம் வளர்ந்தது. ஊருக்குப் புறப்படும் நாளுக்கு முதல் நாள் மாலை குமரப்பனைத் தேடிச் செல்லும் போதே மோகினியிடம் சந்திக்க

வருவதாக ஒப்புக் கொண்டிருந்ததை நினைவு கூர்ந்தான் சத்தியமூர்த்தி. ஊருக்குப் போவதைச் சொல்லிக் கொள்ள மோகினியிடம் சென்றதையும் அப்படிச் சென்றிருந்த போது அங்கு நிகழ்ந்தவற்றையும் குமரப்பனிடம் சொல்வதற்கு வாய்க்கவில்லை. ஆனால் குமரப்பனாகவே நடுவில் ஒரு நாள் அவளைப் பற்றிச் சத்தியமூர்த்தியிடம் சில வார்த்தைகள் பேசியிருந்தான். ''அந்தப் பெண்ணுக்கு அவள் மேற்கொண்டிருக்கும் கலைத் துறையில் நல்ல எதிர்காலமும், புகழும் இருக்கின்றன. அந்தக் கலையை உயர்ந்த தரமாகவும் படித்துக் கொண்டிருக்கிறாள். இந்தக் கண்ணாயிரம் குறுக்கே புகுந்து பாழாக்கி விடாமல் இருக்க வேண்டும். இவன் ஏதோ மஞ்சள்பட்டியார் தலையைத் தடவி இரண்டு மூன்று லட்ச ரூபாய் முதல் போடச் சொல்லி 'மூன் லைட் பிக்சர்ஸ்' என்றோ 'அமாவாசை பிக்சர்ஸ்' என்றோ படத் தயாரிப்புக் கம்பெனி ஆரம்பிக்கப் போகிறானாம். மோகினியும் பார்க்க இலட்சணமாக இருக்கிறாள். அவளுடைய அம்மாக்காரி கண்ணாயிரம் சொல்கிறபடி தலையாட்டுகிறாளாம். தங்க விக்கிரகம் போலப் பார்க்கிற எவனுக்கும் விரசமாக எந்த எண்ணமும் தோன்ற இடம் இல்லாதபடி ஏதோ நல்ல நாட்டியமாக ஆடிக் கொண்டிருக்கிறது அந்தப் பெண். சினிமாவில் நடிக்கப் பண்ணுகிறேன் என்று கண்ணாயிரம் பாழாக்கி விடப் போகிறான். கண்ணாயிரம் எமகாதகன். யார் பணத்தையோ முதலாகப் போட்டு, யார் அழகையோ விளம்பரமாகக் காண்பித்துத் தான் பெரிய மனிதனாகிக் கடைசியில் மற்ற இருவரையும் நடுத் தெருவில் நிற்கும்படி செய்து விடுவான். இந்த விவரத்தையெல்லாம் அந்தப் பெண்ணுக்கோ, அவள் தாய்க்கோ யார் எடுத்துச் சொல்லப் போகிறார்கள் ?— பாவம்! வழி காட்டுகிறவர்கள் இல்லாத அநாதைத் திறமைகள் எல்லாம் இந்த நாட்டில் யார் யாருக்கோ பயன்பட்டு வீணாகி அழிய வேண்டும் என்பது தான் நியதிபோல் இருக்கிறது. கண்ணாயிரம் இந்த முயற்சியில் இறங்கி யிருப்பதாக என் காதில் செய்திகள் விழுகின்றன. இப்படிச் செயல்கள் கண்ணாயிரத்துக்குப் புதுமையில்லை. இப்படிச் செயல்களாலேயே வளர்ந்து வாழ்கிறவர் அவர். இந்தக் கொடுமையைப் புரிந்து கொள்ளாமல் மாட்டிக் கொண்டு பாழாகிறவர்கள் பாடுதான் பரிதாபம். மஞ்சள்பட்டியாரைப் பற்றி நான் கவலையோ, அநுதாபமோ பட மாட்டேன். அவரைப் பொறுத்தவரை அவருக்கும் இதெல்லாம் வேண்டியதுதான். தேவைக்கதிகமான வெள்ளைப் பணத்தையும், கருப்புப் பணத்தையும் வைத்துக் கொண்டு 'என்ன செய்யலாம்' 'என்ன செய்யலாம்' என்று துறுதுறுத்துத் திரிகிறவர்கள் கண்ணாயிரத்திடம் சிக்கிக் கொள்ள வேண்டியதுதான். ஆனால் மோகினியைப் போன்ற அபலைகள் சிக்கிக் கொள்ளக் கூடாது'' என்று குமரப்பன் கூறியிருந்தான். சத்தியமூர்த்தியாவது ஒரு நாகரிகத்துக்குக் கட்டுப்பட்டுக் கண்ணாயிரத்தை அவர் இவர் என்று மரியாதைப் பன்மை கொடுத்துப் பேசுவான். குமரப்பன் அந்த மரியாதையும் கொடுக்க மாட்டான். கண்ணாயிரத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தாலே ஏக வசனத்தில்தான் வாக்கியங்கள் வரும் அவனுக்கு.



''ஏன் சுவாமி! இந்தத் தோட்டத்தில் பூப் பறிக்கக் கூடாது என்று போர்டில் எழுதியிருக்கிறதே, கண் தெரியவில்லையா?''

''யாரையா பூவைப் பறித்தார்கள்? செடிகளை வேரோடு அல்லவா நான் பிடுங்கிக் கொண்டு போகிறேன்!''

சத்தியமூர்த்தி மறு நாள் மாலை இரயிலில் மல்லிகைப் பந்தலுக்குப் புறப்படுவதற்கு இருந்ததால் மோகினியிடம் ஏற்கெனவே ஒப்புக் கொண்டிருந்தபடி ஊருக்குச் செல்வதற்கு முந்திய தினமாகிய இன்று அவளைக் காணச் சென்றான். குமரப்பன் கண்ணாயிரத்தைப் பற்றிச் சொல்லி எச்சரித்த செய்திகளையெல்லாம் அவளிடம் சொல்லலாமா வேண்டாமா என்று சிந்தித்துக் கொண்டே போனான் அவன். கண்ணாயிரத்தைப் பற்றி அவளுக்கே நல்ல அபிப்பிராயம் இல்லை என்பது அவனுக்குத் தெரியும். இவற்றையெல்லாம் அவளிடம் சொல்வதற்கும் அவளை எச்சரிப்பதற்கும் தான் யார்? தனக்கென்ன உரிமை? என்று நடு நடுவே மனம் தயங்கியது. கருணையும் பரந்த நோக்கமும் உள்ளவனுக்கு உரிமையும், உறவும் பார்த்துத் தான் மனிதர்கள் மேல் இரக்கப்படத் தெரிய வேண்டும் என்பதில்லை. யாருக்குத் துன்பம் வந்தாலும் இரக்கப்படத் தான் வேண்டும். இந்த விதமான எண்

ணங்களோடு அவன் மோகினியின் வீட்டுக்குள் படியேறிச் சென்றபோது அவள் அவனை எதிர்பார்த்துத் தனியாகக் காத்திருந்தாள். தன்னைப் பார்த்ததும் அவள் அடைந்த உற்சாகத்தைக் கண்டு சத்தியமூர்த்தியே அயர்ந்து போனான். வழக்கம் போல் காப்பி சிற்றுண்டி உபசாரத்துக்குப் பின் கேட்கலாமா, கேட்கக்கூடாதா என்று தயங்கிக் கொண்டே அவளிடம் ஒரு கேள்வியைக் கேட்டான் சத்தியமூர்த்தி:

''கண்ணாயிரத்துக்கும் உங்கள் வீட்டுக்கும் என்ன தொடர்பு என்று நான் தெரிந்து கொள்ளலாமோ? தயவு செய்து இந்தக் கேள்வியை எந்த விதத்திலும் தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள். உங்கள் மேல் உள்ள அநுதாபத்தின் மிகுதியால்தான் இந்தக் கேள்வியைக் கேட்கிறேன்.''

''தொடர்பாவது ஒன்றாவது? ஏதோ வருகிறார்.... போகிறார். அவரால்தான் இந்த உலகமே நின்று விடாமல் சுற்றிக் கொண்டிருக்கிறது என்று அம்மாவுக்கு ஒரு பிரமை. சபைகளிலும், பொருட்காட்சிகளிலும் நாட்டியத்துக்குக் கூப்பிடுகிறவர்கள் கண்ணாயிரம் சொல்லித் தூண்டுவதால்தான் கூப்பிட வருவதாக அம்மாவை அவரே நம்ப வைத்திருக்கிறார். என்னை அப்படியே சினிமா வானில் இலட்ச இலட்சமாகப் பணம் சம்பாதிக்கும் நட்சத்திரமாக மாற்றி விடப் போவதாக அம்மாவிடம் அவர் வாய்க்கு வாய் சொல்லிக் கொண்டு திரிகிறார். கூந்தல் தைல விளம்பரம், வாசனைச் சோப்பு விளம்பரம், பட்டுப் புடைவை விளம்பரம் என்று எதன் பெயரைச் சொல்லியாவது அம்மாவுக்குப் பணம் சம்பாதித்துக் கொடுக்கிறார். இவை எல்லாம் பிடிக்காமல் இருந்தும், பிடித்திருப்பது போல அங்கீகரித்துக் கொண்டு சாக மாட்டாமல் நானும் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்'' என்று மோகினி அவனுக்கு மறுமொழி கூறியபோது கண்ணாயிரத்தின் மேலிருந்த வயிற்றெரிச்சல் ஏதோ ஒரு விதத்தில் வெளிப்பட்டது. பொறுமையிழந்து பேசிக் கொண்டிருந்தான் அவன்.

''உங்களுடைய இதயத்தில் மண்டிக் கிடக்கும் வேதனைகளைக் கிளறி விடுவதாக என்னுடைய கேள்வி அமைந்திருந்தால் அதற்காக நான் வருத்தப்படுகிறேன். கண்ணாயிரத்தை நீங்களே சரியாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். அதிகமாக நம்பி ஏமாந்து போகக் கூடாது'' என்று அவளுக்கு எச்சரிக்கை செய்தபோது சத்தியமூர்த்தியின் மனம் தன்னைத் தானே குத்திக் காட்டியது. 'கண்ணாயிரத்தை நம்பி ஏமாந்துவிடக் கூடாது' என்று மோகினிக்கு அறிவுரை கூறிக் கொண்டு நிற்கிற நானே என் தந்தையிடம் இதை வற்புறுத்திக் கூற முடியாமல் போய் விட்டதே' என்று நினைத்துப் பெருமூச்சு விட்டான் அவன். சிறிது நேரம் கழித்து மீண்டும் அவளே அவனிடம் பேச ஆரம்பித்தாள். ''உங்களை நான் இன்று சந்திக்க விரும்பிய காரியம்''... என்று சொல்லிக் கொண்டு தயங்கித் தயங்கி நடந்து போய்க் கூடத்தில் இருந்த அந்த முருகன் படத்துக்குக் கீழே நின்றாள் அவள். நாற்காலியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த அவனும் அவளோடு எழுந்து போய் நின்றான். அப்போது அவள் அவனே எதிர்பார்த்திருக்க முடியாத புதுமையான காரியம் ஒன்றைச் செய்தாள்.

''இந்தக் கையால்தான் என்னைக் காப்பாற்றி எனக்கு அபயமளித்தீர்கள் நீங்கள்! என்னுடைய ஞாபகமாக இது இந்தக் கையில் இருக்கட்டும்'' என்று தன் வலது உள்ளங் கையில் அதுவரை மூடி வைத்திருந்த நீலக் கல் மோதிரம் ஒன்றை அவனுடைய வலது கரத்து விரலில் தானே கைப்பற்றி அணிவித்தாள் மோகினி. இன்பகரமான அந்த அதிர்ச்சியில் ஓரிரு கணங்கள் தயங்கிய பின், ''ஞாபகம் ஒரு பக்கத்தில் மட்டும் இருந்து பயனில்லை! இரண்டு பக்கத்திலும் அந்த ஞாபகம் நிரம்பியிருக்க வேண்டும்'' என்று கூறியவாறே தன் வலக் கரத்தின் மற்றொரு விரலில் ஏற்கெனவே இருந்த வேறோர் மோதிரத்தைக் கழற்றி நிலாக் கொழுந்து போல் வனப்பு மிக்கதாயிருந்த அவளுடைய மோதிர விரலில் பூட்டினான் சத்தியமூர்த்தி. வெட்கமும் முறுவலுமாக அவள் முகம் அவனை நோக்கி நிமிர்ந்த வேளையில் அவன் முகமும் அவளை நோக்கி ஏறிட்டுப் பார்த்தது. ஒருவர் அறியாமல் மற்றொருவர் பார்க்க முயன்று இருவருமே பார்த்துக் கொண்ட அந்த நிலையில் கள்ளத்தனமானதொரு மகிழ்ச்சி பிறந்தது.

''அதோ! அந்தக் கண்ணாடியில் நாம் நிற்பதைப் பாருங்கள்!'' என்று எதிரேயிருந்த மிகப் பெரிய நிலைக் கண்ணாடியைச் சுட்டிக் காண்பித்தாள் அவள். சத்தியமூர்த்தி நிமிர்ந்து எதிரே பார்த்தான்.

''இப்போது நாம் நிற்கிற கோலம் எப்படி இருக்கிறதென்று நான் சொல்லட்டுமா?'' — அவள் குரல் அவனைக் கொஞ்சியது. 'சொல்லேன்' என்று அவன் பதில் கூறியதும் அவள் எதைச் சொன்னாளோ அதைக் கேட்டுப் பேரின்பச் சிலிர்ப்படைந்தான் அவன். (தொடரும்)

# நீகோ
## ஜெர்மிஸைடல் சோப்
## ஒரு பார்க்-டேவிஸ் தயாரிப்பு

உங்கள் சருமத்தைச் சுத்தமாகவும் ஆரோக்கியத்துடனும் வைத்துக் கொள்ளவும், பருக்கள், கருநிறப் படைகள், வேர்க்குரு மற்றும் இதர சாதாரண சரும நோய்களின்றி இருக்கவும் உதவுகிறது. தவறாமல் தலைமயிரைச் சுத்தம் செய்ய உபயோகித்து வரின், நெக்கோவின் கிருமிநாசக நுரை வழுக்கை ஏற்படாமலிருக்க ஒரு நல்ல பாதுகாப்பாக இருக்கும். சிறப்பான மதிப்பையுடைய கிருமிநாசக சோப்பான நீகோ உங்களுக்கு மும்மடங்கு நன்மையளிக்கிறது— சுத்தமாக்க, நோய்கிருமி பரவாமல் தடுக்க, பாதுகாக்க, உதவுகிறது. தினமும் உங்கள் சருமத்திற்குத் தேவையான கவனத்தைச் செலுத்துங்கள்.




NATIONAL PD 9263

தினசரி உபயோகத்திற்கான ஆதி கிருமிநாசக சோப்

உலகத்தின் கதை—2

# பூமி குளிர்ந்தது

எரியும் வாயுக்களினாலாகிய சூரியன் என்ற நட்சத்திரத்திலிருந்து எப்படிப் பல கிரகங்கள் பிரிந்தன என்பதைச் சென்ற இதழில் படித்தீர்கள். அப்படிப் பிரிந்த கிரகங்களில் ஒன்றான பூமி அடைந்த பலவிதமான மாறுதல்களைப் பற்றிப் பார்ப்போம். குமுறிக் கொதித்துக் குமையும் வாயுக்கோளமான பூமி, சுழன்றபடியே தன் தாயான சூரியனையும் சுற்றிக் கொண்டிருந்தது. இப்படிப் பல்லாயிரம் வருஷங்கள் சுழன்றுகொண்டே இருக்கும்போது இந்த வாயுக்கள் குளிர்ந்து திரவமாயின. உலோகக் குழம்பு கொதிக்கும் போது மேல் பரப்பில் அதன் அழுக்குகள் ஆடை போலப் படியுமல்லவா? அதே போலப் பூமியின் நடுவில் அடங்காமல் கொதித்துக் குமுறும் உலோகக் குழம்பு இருக்க அதன் இலேசான பகுதிகளும் சாம்பல் கசடு ஆகியவைகளும் மேல்பரப்பில் பாறையாக ஆரம்பித்தது. இந்தப் பாறை கெட்டிப்பட ஆரம்பித்த போது கெட்டிப்படாத எரிமலைக் குழம்பு பாறையின் மேல் பரப்பில் ஒழுங்கற்ற உருவ அமைப்புடன் மிதந்து கொண்டிருந்தது. கனமான மற்றப் பொருள்கள் உலோகக் குழம்பில் அமிழ்ந்து முழுகி உலோகத்தாலாகிய பூமியின் நடுமையமாகியது. கெட்டிப்பட்ட மேல்பரப்பு இப்போது நாம் காணும் பூமியைப் போல் இல்லாவிட்டாலும் கண்டங்களுக்கு முன்னோடியான ஏதோ ஓர் அமைப்பில் உருவாக ஆரம்பித்தது. இப்படி மேல் பரப்பு கெட்டிப்படும் இதே சமயத்தில், நடுவில் இருக்கும் குமுறிக் கொதிக்கும் உலோகக் குழம்பு ஆடையாகி வரும் மேல் பரப்பில் பலவீனப் பகுதிகள் எங்காவது இருக்கின்றனவா என்று முண்டிப் பார்க்க ஆரம்பித்தது. அம்மாதிரியான இடங்களின் வழியாகத் திரவமான பூமிக் குழம்பு பீச்சி அடித்து வெளியே வரலாயிற்று. இப்படி வழியும் குழம்பு விரைவிலேயே குளிர்ந்து கெட்டிப்பட்டுப் பாறையாகியது. இப்படி உருவாகும் எரிமலைப் பாறைகள் பூமியின் மேல் பரப்பில் மலைத் தொடர்களையும், பள்ளத்தாக்குகளையும் உருவாக்கியதோடு பூமியின் மேல்பரப்பை இன்னும் கடினமாக்கின.

இன்னும் சில வாயுக்கள் கெட்டிப்படாமல் சுழலும் பூமியை மேலங்கியைப் போலச் சுற்றிச் சூழ்ந்து கொண்டிருந்தன. இவைகளில் முக்கியமான ஜலவாயு, பிராணவாயு, நைட்ரஜன் வாயு ஆகியவை ஒன்று சேர்ந்த நமது முதன்முதலான வாயு மண்டலம் உருவாகியது. பெருவாரியான நீராவி, கரியமில வாயு, நைட்ரஜன் இவைகளோடு எரிமலைப் புகையும் ஆவியும் கலந்த மேகம் பூமியிலிருந்து தொடர்ந்து கிளம்பி வான மண்டலத்தில் கவிந்து கொண்டது. சூரிய கிரணங்கள் ஊடுருவிச் செல்ல முடியாதபடி இவை பூமியின் மேல் பரப்பில் கவிந்து கொண்டதால் அப்போது பூமியில் ஒளியே இருக்கவில்லை. ஒரே இருள்தான் எங்கும் நிறைந்திருந்தது. அப்போது வாயு மண்டலத்தில் தனியான கலப்பற்ற பிராணவாயு மிகுதியாக இருக்க வில்லை. ஆகவே, உயிர் வாழ்வதற்கு ஏற்ற சூழ்நிலையும் ஏற்படவில்லை. ஆனால் இப்படியே பல்லாயிரம் ஆண்டுகள் போகப் போக, பூமி குளிரக் குளிர வாயு மண்டலத்தில் உள்ள நீராவி குளிர்ந்து இடைவிடாத முடிவற்ற பெரு மழையாகப் பெய்தது. எதன் மீது? இன்னும் சூடு ஆறாத பாறைகளின் மீது. இப்படிக் கொதிக்கும் பாறைகளின்மீது பெய்த மழை மறுபடி நீராவியாக மேலே கிளம்பியது.

எதற்கும் ஒரு முடிவு உண்டல்லவா? பாறைகள் குளிர்ந்தன. பெய்த மழை மறுபடியும் நீராவியாகாமல் நீராகவே பூமியில் வழி வகுத்துக் கொண்டு ஓட ஆரம்பித்தன. நதிகள் தோன்றின. கடல்கள் உருவாயின. மலைகளிலிருந்து பெருகி ஓடிய நதிகளில் உலோக உப்புக்கள் கலந்து வந்தன. மணலையும் வண்டலையும் தங்கள் முகத்துவாரத்தில் கொண்டு வந்து குவித்தன நதிகள். மழை பெய்த பிறகு மேகங்களின் கனம் குறைந்தது. முதன் முதலாகச் சூரிய கிரணங்கள் பூமியின் மீது வீச ஆரம்பித்தன. அந்த ஒளி இப்போதைவிட இன்னும் பிரகாசமாகவும், உயிர் வாழ்வதற்கு ஆதாரமான அல்ட்ரா வயலெட் ஒளியின் தன்மை இன்னும் வீரியம் நிறைந்ததாகவும் இருந்திருக்க வேண்டும். ஆனால் அப்போதைய உலகில் உயிர் வாழ்வன எதுவும் உண்டாகவில்லை. ஜீவனுள்ள எதுவும் தோன்றவில்லை. மலையும் கடலும்தான் அன்றைய உலகம். கடல் நீர் சற்றே உவர்ப்பாகவும் ஏராளமான உலோக உப்புக்கள் கரைந்ததாகவும் இருந்தது. இந்தக் கடலே பின்னால் உயிர்கள் தோன்றுவதற்குத் தாயகமாகவும் இருந்தது.



## 7-4-63 இதழில் வெளியான புதிர்களுக்கு விடை

**ஸ்ரீமதிகளும் குமாரிகளும்:** ஸ்ரீமதி கலா — பச்சை; குமாரி கலா — சிகப்பு; ஸ்ரீமதி நீலா — சிவப்பு; குமாரி நீலா — பச்சை; ஸ்ரீமதி பட்டு — கருப்பு; குமாரி பட்டு — நீலம்; ஸ்ரீமதி மரகதம் — நீலம்; குமாரி மரகதம் — கருப்பு.



**திருடனும் ஓடையும்:** ஒன்பதடி நீளமுள்ள எட்டுப் பலகைகளைக் கொண்டு பத்தடி அகலமுள்ள ஓடையைத் திருடன் எப்படிக் கடந்தான் என்பதையே அருகில் உள்ள படம் விளக்குகிறது. இப்படிக் கட்டுக் காவல்களை யெல்லாம் கடந்து தப்பிய திருடனின் திறமையை மெச்சிய அரசர் அவனை ஊர்க்காவல் படையின் தளபதியாக நியமித்து விட்டார்.

## உங்களுக்குத் தெரியுமா?

ஃ குளிக்கும் போது படிப்பதற்காக ரப்பர் தாளில் ஒரு பத்திரிகையை அச்சடித்து வெளியிட்டுக் கொண்டிருந்தார்களாம், பல வருஷங்கள் — பிரான்ஸ் நாட்டில்!

ஃ செங்கடலின் (ரெட் ஸீ) நீர்வெப்பாக இருக்காது. எடாம் என்ற மலையின் நிழல் இதில் தெரிகிறது. ஹீப்ரு மொழியில் எடாம் என்றால் சிகப்பு (ரெட்) என்று பொருள். ஆகவே பின்னால் இதைச் செங்கடல் என்று தவறாக அழைக்கலானார்கள்.

ஃ நீராவிக் கப்பல்கள் கதகதப்பான நீரைவிடக் குளிர்ந்த நீரில் வேகமாகச் செல்லுமாம்.

ஃ 'இரவெல்லாம் கொசுக் கடி' என்று முகம் சுளிக்கிறீர்கள். கொசு நம்மைக் கடிப்பதில்லை. நம் உடலில் 'பங்க்சர்' அதாவது துவாரம் செய்து நம் ரத்தத்தை நன்கு உறிஞ்சுகின்றன.

ஃ மனிதனைவிடத் தவளைகள்தான் அதிக தூரம் தாண்டக் கூடியவை. தவளை பதின்மூன்றடி ஐந்து அங்குல தூரத்தை ஒரே தாவில் தாவி விடும். ஆனால் மனிதனோ பன்னிரண்டடி ஒன்றரை அங்குலம்தான் இதுவரை அதிகமாகத் தாண்டிய தூரம்.

ஃ வெட்டுக்கிளிகளின் ரத்தம் வெள்ளையானது என்றால் உனக்கு வியப்பாக இருக்கலாம். ஆனால் உண்மை.

**உங்கள் ஆல்பத்துக்கு:**

மிகப் பழமையான நாடு பாரசீகம். ஈரான் என்று இப்போது அழைக்கப்படுகிறது. கலை, கைத்தொழில், இலக்கியம் இவற்றுக்குப் பெயர் பெற்ற நாடு பாரசீகம். பாரசீகம் பட்டு, விரிப்பு, கம்பளி ஆகியவற்றுக்குப் பிரசித்தமானது. பெண்கள் 'புர்கா' (முகமூடி) அணிந்திருப்பார்கள். மேலேயுள்ள பாரசீகப் பெண் அணிந்துள்ள நகைகளையும், உடைகளையும் பாருங்கள்.




விஞ்ஞான முறையில் தயாராகும் லாக்டோ-காலமைன் உபயோகிக்கும்போது உங்கள் சரும எழில் மேம்பட்டு விளங்குகிறது. ● மறைந்து நின்று குணமளிக்கும் லாக்டோ-காலமைன் துரிதமாய் வேலை செய்யும் உயர் ரக காலமைன் அடங்கியது. களங்கங்களைக் களைந்து, வெயில், காற்று ஆகியவற்றால் முகம் கறுத்து விடாமல் காப்பாற்றுகிறது. ● உங்கள் மேனியெழிலை லாடின்போல் வழவழப்பாய் வைத்திருக்கும் லாக்டோ-காலமைனை முகவசீகரப் ● பொருளாக டாக்டர்கள் சிபாரிசு செய்கின்றனர். ● லாக்டோ-காலமைன் வரிசையில் மேலும் கிடைப்பவை: க்ரீம் மற்றும் டால்கம் பவுடர். லாக்டோ-காலமைன் எங்கும் கிடைக்கிறது

# லாக்டோ-காலமைன்

## உங்கள் ஒப்பற்ற எழிலின் அடித்தளம்



# இருவர் உள்ளம்

செழிப்புமிக்க குடும்பத்தைச் சேர்ந்தவன் செல்வம். கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோதே கன்னியர் பலருடன் கைகோர்த்து அலைந்தான். எல்லாப் பெண்களையும் போல உபாத்தியாயினி சாந்தாவையும் நினைத்துத் தன் சேஷ்டைகளைக் காட்ட ஆரம்பித்த செல்வத்துக்கு அந்த உத்தமியின் தோற்றமே நற்பண்பைப் புகட்டுகிறது. ஆனால் சாந்தா அவனைக் கொடியவனாகவே பார்க்கிறாள். விதிவசத்தால் இருவருக்கும் திருமணம் நடந்து விடுகிறது. இருவர் உள்ளத்திலும் நிம்மதியில்லை. சந்தர்ப்பவசத்தினால் செல்வத்தின் மீது கொலைக் குற்றம் சுமத்தப்படுகிறது. அவன் தந்தையே சர்க்கார் தரப்பு வக்கீலாக இருந்து அவனுக்கு எதிராக வாதாடுகிறார். செல்வத்தின் அண்ணன் செல்வத்துக்காக வாதாடுகிறான். கடைசியில் செல்வத்துக்கு விடுதலை. முடிவு சுபம்!

வேண்டாத கணவனாக வரும் சிவாஜி கணேசன் மிக இயல்பாக நடிக்கிறார். அவரது சிரிப்பும், பார்வையும், நடையும், முக பாவங்களும் பாத்திரத்தின் தன்மையை அற்புதமாக வெளிப்படுத்துகின்றன. ஊரிலிருந்து வந்திருக்கும் மாமாவின் கண்களுக்கு அகப்படாமல் கன்னிப் பெண்களை மறைத்து வைக்கச் செல்வம் படும் பாடும், மாமாவிடம் தந்திரமாகப் பேசிச் சமாளிக்க முயல்வதும் சுவாரஸ்யமாயிருக்கின்றன. செல்வம் கட்டிய மனைவியுடன் ஒட்ட முடியாமல் வெய்துயிர்த்து வெந்து போகும் காட்சி சிவாஜியின் நடிப்புக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

சாந்தா பாத்திரத்துக்கு எல்லா விதத்திலும் தகுந்தவர் சரோஜா தேவி. ஏழைப் பள்ளி உபாத்தியாயினியாக வரும் போதும், செல்வத்தின் தொந்தரவு சகிக்காமல் சீறும் போதும், பத்மாவுக்கு ட்யூஷன் சொல்லிக் கொடுத்துக் கொண்டே இடையில் செல்வத்துக்குச் சூடு கொடுக்கும் போதும் பாத்திரத்துக்கு ஏற்ற நடிப்பைக் காண முடிகிறது. கணவன் களங்கமற்றவன் என்பதையறிந்து உதட்டசைவிலேயே உள்ளத் துடிப்பைக் காட்டும் உயிருள்ள நடிப்பு "இருவர் உள்ள"த்தை உயர்த்திக் காட்டுகிறது. கையில் வீணையுடன் அமர்ந்து சாந்தா, "இதய வீணை தூங்கும் போது பாட முடியுமா?" என்று பாடுவது எல்லோருடைய உள்ளத்தையும் தொட்டு நெகிழ்த்தி விடுகிறது. அந்தப் பாட்டும் கருத்து நிறைந்ததாக இருக்கிறது.

ரங்காராவுக்கு ஏற்ற பாகம் தரப்பட்டிருக்கிறது. தன் மகனுக்கு எதிராக வாதாடும் சர்க்கார் வக்கீலாக அவரைக் காணும்போது யாரும் சபாஷ் போடாமல் இருக்க முடியாது. ஆனால் அப்பொழுது நீதிமன்றத்தின் சம்பிரதாய முறைகளைச் சரியாக அநுசரியாமல் கேலிக்கூத்தடித்திருப்பது அசட்டுத்தனமாயிருக்கிறது.

உருக்கமான கதையைப் படமாக்க எடுத்துக் கொண்டவர்கள், நகைச்சுவையை நழுவ விட்டு விட்டார்கள் என்றே சொல்லத் தோன்றுகிறது. 'கிச்' 'கிச்' என்று காமெடியன் கருணாநிதி அடிக்கடி சோடா பாட்டிலைத் திறக்கிறார். அதிலிருந்து ஹாஸ்யம் வெளி வரும் என்று எதிர்பார்த்தாரோ என்னவோ! ராமா ராவின் ஹாஸ்யங்களும் 'சப்'பென்றுதான் இருக்கின்றன.

எம். ஆர். ராதாவும், டி. பி. முத்துலட்சுமியும் படத்தின் ஹாஸ்யத்துக்கு ஓரளவு கைகொடுப்பதாய் நினைத்துக்கொண்டு அதனைக் கைவிடுகின்றனர். ராதா நல்லவனாக வருகிறார். செல்வத்தின் சார்பில் வாதாடி அவனைக் காப்பாற்றி விடுகிறார். குடும்பக் கட்டுப்பாட்டைக் கடைப்பிடிக்க முயன்று தோல்வி யடைந்து நகைப்புக்கு ஆளாகிறார்! ஹாஸ்யமே அட அழகே!

திரைக் கதை, வசனம் மு. கருணாநிதி தீட்டியிருக்கிறார். பல இடங்களில் சுவைபட அமைந்திருக்கிறது. "இருவர் உள்ள"த்தை ஒருமுறை பார்த்து வைக்கலாம். — காந்தன்




# போகுதுபார் ரயில் வண்டி!

உழைப்புக்குத் தகுந்த ஓய்வு வேண்டும். அப்பொழுது தான் அந்த உழைப்புக்கும் மெருகேறும். உடல் உழைப்பு உள்ளவர்கள் 'வெறுமனே' சும்மா இருந்தாலே போதும். ஓய்வாகி விடும். ஆனால் அறிவு உழைப்பு உள்ளவர்கள் எப்படி ஓய்வெடுப்பது? மனித மனம் ஏதேனும் எண்ணாமல்கூடச் சும்மா இருந்ததுண்டா! அப்படி இருக்கத்தான் முடியுமா? பிறகு அதற்கு ஓய்வு கிடையாதா என்றால், உண்டு. அவசியம் உண்டு. வழக்கமாகச் செய்து வரும் தொழிலை விட்டு வேறு விதமான தொழிலில் ஈடுபட்டாலே போதும்; அதாவது மாறுதலான எண்ணமே மனத்துக்கு ஓய்வாகி விடும். என்ன விந்தை! ஆனால் அது உண்மை.

அதனால்தான் ரயிலில் அலுவல் பார்த்து வரும் நான் எழுத்துத் தொழிலை ஓய்வு நேர வேலையாக எடுத்துக் கொண்டேன். ஏன்? எழுத்துத் தொழிலைத்தான் எடுத்துக் கொள்ள வேண்டுமா என்று சிலர், ஏன் பலர் கேட்கலாம். ஏன் எழுத்துத் தொழிலை எடுத்துக் கொள்ளக் கூடாது? என்ற கேள்வியே அதற்குப் பதிலாகும்.

'சள்ளை' பிடித்த அலுவலாயிருந்தாலும் அன்றாடம் அநேக சிப்பந்திகளுடனும் பலவித மக்களுடனும் பழக நேர்வதால், நிகழ்ச்சிகள் பல குறுக்கிடுவதுண்டு. சில சிரிக்கச் செய்யும்; சில வருத்தப்படத் தோன்றும், சில ஆழ்ந்த எண்ணத்தில் ஆழ்த்தி விடும். இவைகளை எழுத்தில் வடித்தால் நன்றாயிருக்குமென்று நான் ஈடுபடுவது உண்டு. அவ்வண்ணம் அநேக நிகழ்ச்சிகள் அவ்வப்போது சிறுகதைகளாக முன்பே மலர்ந்து விட்டன.

எஞ்சியிருப்பவை சில. (இனிமேல் நிகழப் போவது பலவாக இருக்கலாம்) அவைகளை வெளிக் கொண்டு வருகிறேன் இப்போது.

அந்தக் கிராமாந்திர ஸ்டேஷனில் இரவில் அப்பொழுதுதான் கடைசி வண்டி வந்து போயிற்று. உடனே போர்ட்டர் பிளாட்பாரம் விளக்குகளை ஒவ்வொன்றாக அணைத்துக் கொண்டு வந்தான். அப்பொழுது அந்தப் பக்கம் சென்ற ஒரு பிரயாணியை வழிமறித்தான். ''டிக்கெட்டை ஸ்டேஷன் மாஸ்டரிடம் கொடுத்து விட்டு வழியோடு போ ஐயா'' என்றான் போர்ட்டர். ''போ ஐயா சரிதான்'' என்று அந்தப் பிரயாணி உதாசீனம் செய்யவே, போர்ட்டருக்குக் கோபம் வந்து விட்டது . ''என்ன கையையா ஓங்குறே!'' என்று அவன் முகத்தில் ஓங்கி ஒரு குத்து விட்டான் போர்ட்டர். அது படக் கூடாத இடத்தில் பட்டு விட்டதோ என்னவோ! அப்படியே சரிந்து விழுந்து விளக்குக் கம்பத்தில் சாய்ந்து கொண்டு விட்டான் அவன். வாயிலிருந்து இலேசாய் இரத்தம் கூடக் கசிந்தது.

உடனே பயந்தே போய்விட்டான் போர்ட்டர். 'இது என்ன இப்படி நேர்ந்து விட்டதே! அப்படியே தலையைச் சாய்த்து வைப்பானே' என்று எண்ணினான். உடலில் ஒரு வித உதறல் ஏற்பட்டு விட்டது; 'குப்' பென்று வியர்த்தது. இப்படியே தலை மறைவாய்ப் போய் விட்டால் என்ன, என்றெல்லாம் எண்ணியவாறு மெதுவாய் ஸ்டேஷன் பக்கம் வந்தான்.

அப்பொழுது அங்கே போலீஸ் வான் வந்து நின்றது. திபுதிபு வென்று ஐந்தாறு போலீஸ்காரர்கள் இறங்கினார்கள். ஸ்டேஷன் மாஸ்டரிடம் சென்றார்கள். அந்நேரத்தில் அவர்களை அங்கே பார்த்ததும் இன்னும் பீதி ஏற்பட்டு விட்டது போர்ட்டருக்கு. சந்தடி செய்யாது தூணின் மறைவில் நின்று கொண்டான். ''தோளில் சிவப்புக் குட்டை போட்டுக் கொண்டு இங்கு எவனாவது இறங்கினானா சார்? ஒரு கொலைக் கேஸ் சம்பந்தமாக அவனைப் பிடித்து ரிமாண்டில் வைத்திருந்தோம். தப்பித்துக் கொண்டு வந்து விட்டான். அநேகமாக ரயிலில்தான் ஏறியிருப்பான் என்ற எண்ணத்திலே ஒவ்வொரு ஸ்டேஷனாகக் கேட்டுக் கொண்டு வருகிறோம்'' என்றார்கள்.

''அப்படி ஒருத்தனும் இங்கு இறங்கினதாக எனக்கு நினைவில்லையே!'' என்றார் ஸ்டேஷன் மாஸ்டர்.

ஆனால் அதைக் கேட்டுக் கொண்டிருந்த அந்த போர்ட்டருக்கு உடனே ஒரு யோசனை பளிச்செனத் தோன்றியது. ''இப்படிக் கொஞ்சம் வாருங்களேன். இவன்தானா பாருங்கள்'' என்றான். விளக்குடன் அந்தப் போலீஸ்காரர்களைப் பிளாட்பாரம் கடைசிக்கு அழைத்துச் சென்றான். தான் டிக்கெட் கேட்டதாகவும் அப்படியே அவன் வலிப்பு வந்து விழுந்து விட்டதாகவும் சொல்லி வைத்தான் போர்ட்டர். அருகில் சென்று 'டார்ச்' அடித்துப் பார்த்தார்கள் போலீஸ்காரர்கள். ஆம், அவனேதான்! அப்பொழுதுதான் தலை கிறு கிறுப்புத் தெளிந்து வாயைத் துடைத்துக் கொண்டான் அவன். 'என்னடா செல்லப்பா ஒரு செய்தியும் சொல்லாமல் வந்துட்டே யேடா இப்படி?' என்று அவனைப் பிடித்துக் கொண்டார்கள்.

கடைசியில் போலீஸ் இலாகாவிலிருந்து அந்தப் போர்ட்டருக்கு — அவனைப் பிடித்துக் கொடுத்ததற்காகச் சன்மானம்கூட வந்தது!

அந்தப் பாயிண்ட்ஸ்மேன் எப்போதும் ஒழுங்காக வேலை பார்ப்பவன்தான். ஏதோ அன்று அவனுக்குப் பொல்லாத வேளை. அப்படி நேர்ந்து விட்டது. அப்பொழுது அந்த ஸ்டேஷனில் இரண்டு வண்டிகள் சந்திப்பு. முதல் வண்டி வந்து நின்று விட்டது. பாயிண்ட்ஸ்மேன் அப்பொழுதுதான் சாப்பிட்டு முடித்து எச்சில் கையோடு இருந்தான். அதனால் அவனுக்குச் சாப்பாடு கொண்டு வந்திருந்த அவன் பையன், இரண்டாவது வண்டிக்காக வெடுக்கென்று அடுத்த வய

னுக்குப் பாயிண்டைப் போட்டான். அங்கு நின்ற வண்டியின் கடைசிப் பெட்டியிலிருந்த அதிகாரி அதைப் பார்த்து விட்டார். உடனே இறங்கி விடு விடென்று அங்கு வந்தார். ''என்ன காரியம் செய்தேடா நீ? யார் இந்தப் பையன்? இவன் பாயிண்டை அடிக்கலாமா? வண்டிக்கு ஏதேனும் விபத்து ஏற்பட்டால்! உன் பெயரென்ன? தொலைத்து விடுகிறேன் பார்'' என்று வெகுண்டார். ''நம்ம பையன் தான் சார். இதோ சாப்பிட்ட எச்சில் கையாயிருந்ததனாலே அவன் பாயிண்டை அடிச்சான். இல்லாவிட்டால் அவனைத் தொட விடுவேனா? இதோ நானும் பார்த்து விட்டேன். பாயிண்டு சரியாகவே இருக்கு'' என்று ஈனஸ்வரத்தில் சொன்னான்.

இருந்தும் பயனில்லை. ஒரு வருஷத்துக்குச் சம்பள உயர்வு இல்லை என்று தண்டனை வந்து விட்டது. மிகவும் வருத்தப்பட்டுக்கொண்டான் பாயிண்ட்ஸ்மேன். அதன் பிறகு அந்த ஸ்டேஷனிலேயே வேலை செய்யப் பிடிக்கவில்லை அவனுக்கு. அடுத்த மாதத்துக்குள்ளாகவே மாற்றல் வாங்கிக் கொண்டு வேறு ஸ்டேஷனுக்குப்போய்ச் சேர்ந்தான்.

அங்குதான் அந்த அரிய நிகழ்ச்சி நடந்தது.

அது மலைப்பாங்கானது. அந்த ஸ்டேஷன் சற்று இறக்கத்திலும் அதற்கடுத்த ஸ்டேஷன் சற்று மேட்டிலுமாக இருந்தன. அன்று ஒரே காற்று மழை. அப்பொழுது அந்த ஸ்டேஷனில் நிற்காத கூட்ஸ் வண்டி ஒன்று வேகமாய் ஓடியது. பின்னாலேயே 'பாசஞ்சர்' வண்டி வந்து நின்றது. அதில் அந்த அதிகாரியும் இருந்தார். பக்கத்து ஸ்டேஷனில் அந்த கூட்ஸ்வண்டி போய்ச் சேர்ந்த பிறகுதானே இந்த வண்டி புறப்பட முடியும்? அதனால் சற்று நேரம் காத்திருந்தது அந்த 'பாசஞ்சர்' வண்டி. அப்பொழுது மழை சற்று விட்டிருந்தது. வண்டியிலிருந்த அதிகாரியும் இறங்கி வந்து விட்டார். அப்பொழுதுபக்கத்து ஸ்டேஷனைக் கூப்பிட்டு 'இன்னுமா அந்த கூட்ஸ் வண்டி வந்து சேரவில்லை' என்று ஸ்டேஷன் மாஸ்டர் கேட்டுக் கொண்டிருந்தார்.

ஆனால் அந்த கூட்ஸ் வண்டியில் ஏதோ இணைப்புக் கோளாறினால் கடைசி நாலு வாகின்கள் பிய்த்துக்கொண்டன. அதோடு அங்கு இறக்கமாக இருந்ததால் பின்னுக்கியே வேகமாக ஓடிவரத் தொடங்கின.

அப்பொழுது அந்தப் பாயிண்ட்ஸ்மேனின் பையன் தன் குவார்ட்டர்ஸ் வாசலில் வந்து நின்று கொண்டிருந்தான். தூரத்தில் அந்த கூட்ஸ் வண்டியில் கடைசிப் பாகம் வேகமாக வந்துகொண்டிருந்தது அவன் கண்ணில் பட்டது. அப்படியே விட்டால் அந்த பாசஞ்சர் வண்டியின் வந்து மோதிக்கொண்டு விடுமே! அவன் மூளை வேலை செய்தது. உடனே ஒரே ஓட்டம் பிடித்தான், பாயிண்டைப் பார்க்க. அந்த வாகின்கள் அந்த இடத்துக்கு வருவதற்கும் அவன் வேறு லைனுக்குப் பாயிண்டு அடிப்பதற்கும் சரியாக இருந்தது.



சம்பந்தம்—

அந்த வாகின்கள் காலியாயிருந்த வேறு லைனில் போய் நின்று விட்டன.

அப்பொழுதுதான் இந்த நிகழ்ச்சி ஸ்டேஷன் மாஸ்டருக்கும் அங்கிருந்த அதிகாரிக்கும் தெரிய வந்தது. ஓடோடியும் வந்து பார்த்தார்கள். சரியான வேளையில் சமயோசிதமாய் நடந்து கொண்ட பாயிண்ட்ஸ்மேனைக் கூப்பிட்டனுப்பினார் அதிகாரி. அந்த பாயிண்ட்ஸ்மேன் தன் பையனுடன் வந்து நின்றான். நடந்ததையும்சொன்னான். பையனை மிகவும் மெச்சினார் அதிகாரி. ''இதற்கு முன் ஒரு முறை இதுமாதிரி பாயிண்டு அடித்து எனக்கு ஒரு வருஷம் தண்டனை வாங்கிக் கொடுத்தானுங்க'' என்று நினைவூட்டினான் பாயிண்ட்ஸ்மேன். உடனே அந்தத் தண்டனையை ரத்து செய்ததோடல்லாமல் பையனுக்கும் ஒரு வேலை போட்டுக் கொடுத்தார் அதிகாரி.

தென் பிராந்திய ரயில்வேயின் உத்தியோகம் பார்க்கும் திரு. சம்பந்தம் அவர்கள் ஏராளமான சிறு கதைகள் எழுதிப் பலரை மகிழ்வித்திருக்கிறார். அவர் கூறுகின்ற சம்பவங்களில் சில சிரிக்க வைக்கின்றன; வேறு சில நெக்குருக நெகிழச் செய்கின்றன.

யுத்த காலம். தெற்கே போகும் கூட்ஸ் வண்டி வல்லம் படுகை ஸ்டேஷனுக்கு நாள்தோறும் நடுநிசியில் தான் வந்து கொண்டிருந்தது. கைகாட்டி மரம் இல்லாத ஸ்டேஷன் அது. அதனால் வண்டி வருவதோ போவதோ எல்லாம் 'கண்ட்ரோல் போன்' மூலம்தான்

செய்தி வரும் அந்த ஸ்டேஷனுக்கு? அன்று அப்பாவுப் படையாச்சி மாயவரத்துக்குப் பதிந்திருந்த ஐம்பத்தாறு பச்சை வாழைத்தார்களும், சிவபுரி லிங்கப் படையாச்சி திருவாரூருக்குப் பதிந்திருந்த ஐந்து புகையிலைக் கட்டுகளும் அந்த கூட்ஸ் வண்டி ஏற்றுமதிக்காகத் தயாராகக் காத்திருந்தன.

பக்கத்து ஸ்டேஷன் சிதம்பரத்துக்கு அந்த கூட்ஸ் வண்டி வந்ததுமே, கண்ட்ரோலர் வல்லம் படுகை ஸ்டேஷன் மாஸ்டரைக் கூப்பிட்டுச் சொன்னார். 'சிதம்பரத்திலேயும் வேலையைச் சீக்கிரம் முடிக்கச் சொல்லியிருக்கேன். அநேகமாக போட்மெயிலுக்கு முன்னாலேயே கூட்ஸ் வண்டியைக் கொண்டு வந்தாலும் வந்து விடுவேன், தயாராயிரு'' என்றார்கள். அப்பொழுது போர்ட்டர் சின்னக்கண்ணுதான் டியூட்டியில் இருந்தான். ஸ்டேஷன் மாஸ்டர் போர்ட்டரைக் கூப்பிட்டு விஷயத்தைச் சொன்னார். ''ஓ! அதெல்லாம் ஒரு விநாடியிலே ஏற்றி விடலாம் சார். இதோ அப்பாவுப் படையாச்சி ஆள்கூட இங்கேதான் படுத்திருக்கான். அவனையும் உதவிக்கு வைத்துக் கொண்டு வண்டிக்கு 'டிலே' இல்லாமல் ஏற்றி விடலாம்'' என்றான் அவன்.

அதன் பிறகு ஸ்டேஷன் மாஸ்டர் உள்ளே சிம்னி விளக்கைத் தூக்கி வைத்துக் கொண்டு, அன்று நாள் முழுதும் டிக்கட்டு விற்ற கணக்கைப் பார்க்கத் தொடங்கி விட்டார். போர்ட்டர் சின்னக்கண்ணு பிளாட்பாரத்தில் சிக்னல் விளக்கைப் பக்கலில் வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

கடைசியில் வண்டி வரும் சத்தம் கேட்டது. ஸ்டேஷன் மாஸ்டர் அவசரம் அவசரமாகக் கணக்கை முடித்துக் கொண்டிருந்தார். அதோ வண்டி வந்து நின்றுவிட்டதே! அது என்ன பாதிப் பிளாட்பாரத்திலேயே நிற்கிறதே! 'செல்லக்கண்ணு!' என்று கூப்பிட்டுக் கொண்டே ஓடி வந்தார் ஸ்டேஷன் மாஸ்டர். என்ன ஆச்சரியம்! அங்கே அப்படி போட் மெயில் அல்லவா நின்று கொண்டிருக்கிறது! பாதி வழியிலேயே கையிலிருந்த சிக்னல் விளக்கில் பாதி டேஞ்ஜர் போட்டதும் போடாததுமாக வந்து கொண்டிருந்தான் போர்ட்டர். 'என்னடா இது!' என்று அவ்விளக்கைக் காட்டினார் ஸ்டேஷன் மாஸ்டர். ''வண்டி வேகமாக வந்ததா? எங்கே கூட்ஸ் வண்டி நிற்காமல் போயிடுமோ என்று டேஞ்ஜர் போடப் பார்த்தேன். அதற்குள் போட்மெயில் வந்து நின்று விட்டது'' என்றான். ''சரி, சரி'' ஓடு. டிரைவரைப் பார். என்ன சொல்கிறார் கேளு'' என்று சொல்லிக் கொண்டே ஸ்டேஷன் மாஸ்டரும் எஞ்ஜினிடம் ஓடினார். ஆனால் அதற்குள் 'ஓ...ஓ..' என்று கூவிக் கொண்டே போட் மெயில் ஓடியே விட்டது.

நடந்த விஷயத்தைப் போன் மூலம் கண்ட்ரோலரிடம் சொன்னார் ஸ்டேஷன் மாஸ்டர். ''ஏன், கூட்ஸ் வண்டி என்று நினைத்துக் கொண்டு டேஞ்ஜர் போட்டு நிறுத்திட்டயா?'' என்றார் கண்ட்ரோலர்.

''இல்லையே சார். நான் உள்ளேயே இருந்தேன்.'' ''போர்ட்டர் டேஞ்ஜர் போட்டிருப்பான். விசாரித்துப் பார்.'' கண்டிப்புத் தொனித்தது கண்ட்ரோலர் குரலில். அதன் பிறகு கண்ட்ரோலரிடம் பேச ஸ்டேஷன் மாஸ்டருக்குத் தைரியமே இல்லை. போர்ட்டர் டேஞ்ஜர் போட்டுத்தான் போட் மெயில் நின்றிருக்க வேண்டும் என்று ஸ்டேஷன் மாஸ்டருக்கே ஆழ்ந்த சந்தேகம் இருந்த பொழுது அவனைக் கூப்பிட்டு என்ன விசாரிப்பது! தலைமீது கையை வைத்துக்கொண்டு அப்படியே உட்கார்ந்து விட்டார்.

சற்று நேரம் கழித்து போர்ட்டர் உள்ளே வந்தார். ''என்னடா, செல்லக்கண்ணு! இப்படி நடந்து விட்டதே?'' என்றார்.

''அதற்கு நாம் என்ன செய்யலாம்?'' என்றான் அவன். ''இது யுத்த காலம்டா. போட் மெயிலை டேஞ்சர் போட்டு நிறுத்தினேன் என்றால் தலையே போய்விடும்'' என்றார். ''அது எப்படிங்க அப்படிச் சொல்லமுடியும்?'' என்று சொல்லிக் கொண்டே பிளாட்பாரத்துக்குச் சென்று விட்டான் போர்ட்டர்.

அதற்குள் கூட்ஸ் வண்டி வந்தது. சாமான்களை ஏற்றி அனுப்பி வைத்தார்கள்.

''நிச்சயம் ஆபீஸிலிருந்து இதற்குக் கேள்வி வந்துவிடும். என்ன பதில் எழுதுகிறது?'' என்று கையைப் பிசைந்துகொண்டு கொட்டு கொட்டென்று விடிகிறவரை உட்கார்ந்திருந்தார் ஸ்டேஷன் மாஸ்டர். அதன் பிறகு போட் மெயில் திருச்சி சேர்ந்ததும், ஐந்து நிமிஷங்கள் தாமதமாக வந்ததற்காக கார்டு கண்ட்ரோலருக்குக் கணக்குக் கொடுத்தார். அதில் சிதம்பரத்துக்கும்—கொள்ளிடத்துக்கும் இடையில் வல்லம் படுகை ஸ்டேஷனில் பயர்மேன் கீழே தவற விட்ட கரி அள்ளிக் கொட்டும் ''ஷவலை' எடுப்பதற்காக ஒரு நிமிஷம் என்று கணக்குக் கொடுத்துக் கொண்டு போனார்.

அதைத் தெரிந்து கொண்ட பிறகுதான் ஸ்டேஷன் மாஸ்டர் முகம் மலர்ந்தது. அவர் பீதியும் கரைந்தது.

அப்பொழுதுதான் மாலை ஆறு நாற்பத்தாறு மின்சார ரயில் மாம்பலம் ஸ்டேஷனை விட்டு நகர்ந்தது. அது கிண்டி வரை சென்று திரும்பும் வண்டியாயிருந்தும் கூட அன்று ஒரே கூட்டம். சற்று நேரத்துக்குள் முதல் வகுப்புப் பிரயாணி ஒருவர் ஸ்டேஷன் மாஸ்டரிடம் ஓடோடியும் வந்தார். ''சார்! சார்! இந்த வண்டியில் முதல் வகுப்பில் என் ஆபீஸ் பைல் ஒன்றை விட்டுவிட்டேன். தயவு செய்து பக்கத்து ஸ்டேஷனுக்குச் சொல்லி எடுத்து வைக்கச் சொல்லுங்களேன்'' என்று பரபரத்தார். ''இதற்குள் வண்டி சைதாப்பேட்டையை விட்டிருக்குமே! எதற்கும் கிண்டிக்கே சொல்கிறேன்'' என்றார் ஸ்டேஷன் மாஸ்டர். ''ஆமாம் சார், அதுவும் நல்லது தான். நானும் கிண்டியில் இறங்க வேண்டியவன்தான். இங்கே காய்கறி வாங்கிப் போகலாம் என்று இறங்கினேன். அவசரத்தில் பைலைத் தவற விட்டு விட்டேன். அதே முதல் வகுப்பிலிருந்து ஒரு பெண் கிண்டியில் இறங்குவாள். அவளிடம் அதைக் கொடுத்து விடச் சொல்லுங்கள்'' என்றார் அந்தப் பிரயாணி. உடனே மாம்பலம் ஸ்டேஷன் மாஸ்டர் கிண்டியைக் கூப்பிட்டு அவ்வண்ணமே சொன்னார். அதோடு 'என்னப்பா இது! இந்த இள வயதிலேயே இப்படி மறந்துவிட்டாயே'

என்று அந்தப் பிரயாணியைப் பார்த்து சொல்லியும் வைத்தார் ஸ்டேஷன் மாஸ்டர்.

அது முக்கியமான பையாக இருந்திருக்க வேண்டும். அந்தப் பிரயாணி அப்படியே கையைப் பிசைந்து கொண்டு உட்கார்ந்து விட்டார். சற்று நேரம் கழித்து ''இத்தனை நேரம் வண்டி கிண்டி போய்ச் சேர்ந்திருக்கும் சார்! மறுபடியும் கொஞ்சம் கேட்டுப் பாருங்களேன்'' என்று கெஞ்சினார் அந்தப் பிரயாணி. ஸ்டேஷன் மாஸ்டரும் கேட்டு விட்டு, ''உங்கள் பைல் கிடைத்துவிட்டதாம். சொன்னது போல் அதை அந்தப் பெண்ணிடம் கொடுத்துவிட்டார்களாம்'' என்றார். முகம் மலர்ந்தது அந்தப் பிரயாணிக்கு. மிக்க வந்தனம் சொல்லிப் பிரிந்தார்.

மறு நாள் காலை ஒன்பது மணி வண்டி முதல் வகுப்பிலிருந்து அந்த நாகரிக நங்கை மாம்பலத்தில் இறங்கினாள். நேரே ஸ்டேஷன் மாஸ்டரிடம் வந்தாள். ''நேற்று மாலை முதல் வகுப்பிலே விட்டுப் போன இந்தப் பையை நீங்கள்தான் எடுத்து என் கையில் கொடுக்கச் சொன்னீர்களா?'' என்று வெகுண்டாள்.

''கோபிக்காதே அம்மா. அந்தப் பிரயாணிதான் அப்படிச் சொல்லச் சொன்னார்.'' என்றார் ஸ்டேஷன் மாஸ்டர். 'அவர் சொல்வார். அவருக்கென்ன!' என்றாள். எள்ளும் கொள்ளும் முகத்தில் வெடித்தன. உடனே கையிலிருந்த பையை மேசை மீது வேகமாக வைத்துவிட்டு, ''அவர் வந்து கேட்டால் கொடுத்து விடுங்கள்'' என்று சொல்லிக் கொண்டே அப்பொழுது வந்து நின்ற ரயிலில் 'சடக்'கென்று ஏறிக் கொண்டுவிட்டாள்.

அதன் பிறகு அடுத்த வண்டிக்கடுத்த வண்டியிலிருந்து அந்த முதல் வகுப்புப் பிரயாணி இறங்கினார் அங்கே. ''ஏன் சார்! அந்தப் பெண் இங்கே வந்தாளா?'' என்றார்.

'ஆமாம் சார். தன்னிடம் அந்த் 'பையை' கொடுத்ததற்காக ரொம்பவும் கோபித்துக் கொண்டாளே! அதையும் என்னிடமே திருப்பிக் கொடுத்து விட்டுச் சென்றாள்'' என்று அந்த பையைக் கொடுத்தார் ஸ்டேஷன் மாஸ்டர். ''உம். கொஞ்சமும் மரியாதை தெரியாதவளாயிருக்காளே! இத்தனைக்கும் அவள் எங்கள் ஆபீஸில் என்னோடு வேலை பார்ப்பவள் சார். இருக்கட்டும். அவளுக்குச் சரியான பாடம் கற்பிக்கிறேன்'' என்று அவளை மிகவும் கறுவிக் கொண்டே அடுத்த வண்டியில் ஏறிப் போனார் அவர்.

ஆனால்என்ன வேடிக்கை! பத்துப் பதினைந்து நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் அந்த இரு முதல் வகுப்புப் பிரயாணிகளுமே மாம்பலம் ஸ்டேஷன் மாஸ்டரைப் பார்க்க வந்தார்கள். 'எங்களை நினைவிருக்கா சார்!'' என்று அறிமுகப்படுத்திக் கொண்டே, 'எங்கள் இருவருக்கும் திருமணம் நிச்சயமாகிக் கல்யாணம் வாணிமகாலில் நடக்கிறது. நீங்கள் அவசியம் வரவேண்டும்' என்று திருமண அழைப்புப் பத்திரிகை ஒன்றைக் கொடுத்தார். 'உங்கள் இருவருக்குமா?' என்று அப்படியே ஆச்சரியத்தில் அமிழ்ந்து விட்டார் ஸ்டேஷன் மாஸ்டர்.

அதே மாம்பலம் ஸ்டேஷனில்தான் அந்தப் பையனும் காலை ஒன்பதரை மணி வண்டிக்கு நாள்தோறும் சென்னைக்குச்சென்று கொண்டிருந்தான். வேண்டுமென்றே பெண்களின் பெட்டிப் பக்கத்தில்தான் ஏறுவான். ஆங்காங்கு பெண்கள் ஏறும்போது; சீழ்க்கை யடிப்பதும், சினிமாப் பாட்டு பாடுவதுமாகப் பொல்லாப் போக்கிரித்தனமாகவும் தரக்குறைவாகவும் நடந்து கொள்வது வழக்கம். அதோடவா! கறுப்புக் கண்ணாடியை மாட்டிக்கொண்டு கழுத்தை வளைத்துப் பெண்கள் பெட்டியை எட்டிப் பார்ப்பதும் உண்டு.

'அவன் கல்லூரி மாணவன் என்றனர்' சிலர். 'போர்ட் டிரஸ்டில் வேலை பார்க்கிறான்' என்றனர் சிலர். 'அவனுக்கு ஒரு வேலையும் கிடையாது; சும்மா ஊர் சுற்றி வருகிறான்' என்றனர் சிலர். 'அவன் வீட்டுக்கடங்காத பையன் சார், எனக்குத் தெரியும்' என்றார் ஒருவர்.

ஆனால் அதுவரை ஸ்டேஷன் மாஸ்டர் அவனை யார் என்றே பார்த்தது கிடையாது. ஒரு நாள் அவனை அடையாளம் காட்டும்படி போர்ட்டரிடம் சொல்லி வைத்தார் ஸ்டேஷன் மாஸ்டர். அவனும் மறுநாளே காட்டிக் வைத்தான். ஸ்டேஷன் மாஸ்டர் பார்த்த பொழுது அவன் நன்றாய் 'டக்'காக உடுத்திக் கொண்டு தன் கறுப்புக் கண்ணாடியை இடுப்புப் பெல்டில் செருகிக் கொண்டு ரொம்பவும் ஸ்டைலாக இருந்தான். 'சரி, நாளைக் காலை வந்தால் அவனை நான் கூப்பிடுவதாக அழைத்து வா'' என்று போர்ட்டரிடம் சொல்லி வைத்தார். ஏதோ நல்ல முறையில் புத்திமதிகள் சொல்லிப் பார்க்கலாம் என்றே தீர்மானித்திருந்தார் அவர்.

ஆனால் அன்றைக்கே சற்று நேரத்திற்குள் வழக்கமாக அங்கிருந்து செல்லும் பெண் ஒருத்தி பெண்கள் பெட்டியின் பக்கத்தில் ஏறிக்கொண்டு ஒரு பையன் நாள்தோறும் போக்கிரித்தனம் செய்து வருவதாக ஸ்டேஷன் மாஸ்டரிடம் புகார் செய்தாள். ''மாலையில் சென்னையிலிருந்து திரும்பும்பொழுதும் இப்படியேதான் ஸார்!'' என்று சற்று வருத்தமாகவே சொன்னாள் அவள். ''நான் கவனிக்கிறேன் அம்மா. விசாரித்து ஆவன செய்கிறேன்'' என்றார் ஸ்டேஷன் மாஸ்டர்.

அன்று மாலை ஓய்வா யிருந்ததால் ஸ்டேஷன் மாஸ்டர் கொத்தவால் சாவடிப் பக்கம் சென்று திரும்பிக் கொண்டிருந்தார். வண்டி கனவேகமாய் நுங்கம்பாக்கத்துக்கும் கோடம்பாக்கத்துக்கும் இடையில் வந்துகொண்டிருந்தபோது திடீரென்று நின்றது. ஏதோ விபத்து என்று அவரவர் இறங்கி ஓடினார்கள். ஸ்டேஷன் மாஸ்டரும் இறங்கி ஓடினார். என்ன கொடுமை! அதே போக்கிரிப் பையன் அங்கிருந்த இரும்புக் கம்பத்தில் அடிபட்டு மூளை சிதறிப்போய்க் கிடந்தான். இரத்த வெள்ளத்தில் அப்படியே மிதந்து நின்றான். பாவம்! அடிபட்ட அந்த நொடியிலேயே போய்விட்டான். சற்று நேரத்துக்குள் வண்டி மீண்டும் புறப்பட்டது. 'நான் அழுது கொண்டே சிரிக்கிறேன்' என்று முணு முணுத்துக்கொண்டே வண்டி ஏறினார் ஸ்டேஷன் மாஸ்டர்.

இவ்வண்ணம் ரயிலில் எத்தனை எத்தனையோ நிகழ்ச்சிகள். அத்தனையையும் பிரசுரிக்க இங்கு இடம் வேண்டுமே?



ஆங்கிலத்தில் எத்தனையோ முழு நீள ஹாஸ்யப் படங்கள் வெளிவந்து ரஸிகப் பெருமக்களின் அமோக ஆதரவுடன் அயராது ஓடியிருக்கின்றன. ஆனால் நம் தமிழ்ப் படங்களைப் பொறுத்த வரையில் முழுவதும் ஹாஸ்யம் என்றால் அது ஒரு வேதனைப் படமாகவே கருதப்பட்டு வந்தது. ஒரு படம் என்றால், அதில் மகிழ்ச்சி, காதல், பிரிவு, சோகம், பிரிந்தவர் கூடுதல், வில்லனின் சதிகள் — ஆகிய அம்சங்கள் இன்றியமையாதவையாகக் கருதப்பட்ட காலம். (இப்பொழுது மாத்திரம் என்ன வாழ்கிறது என்று நீங்கள் கேட்பது என் காதில் விழுகிறது!) அப்படிப்பட்ட காலத்தில் பரிசோதனையில் ஈடுபடத் துணிந்து ''சபாபதி'' வெற்றிகரமாக ஓடுமாறு செய்ததை ஒரு சாதனை என்றே கூற வேண்டும்.




இதைச் சாதித்தவர் யார் தெரியுமா? மதிப்புக்குரிய ஏவி. மெய்யப்பன் அவர்கள் தான். நாடகத் தந்தை ராவ்பகதூர் சம்பந்த முதலியார் அவர்கள் எழுதிய 'சபாபதி' நாடகம் தான் வெள்ளித் திரையில் வெற்றிப் படமாக வெளிவந்தது. சபாபதி படத்தில் ஸ்ரீ டி. ஆர். ராமச்சந்திரன் அவர்களுக்கு வேஷப் பொருத்தம் பிரமாதமாயிருந்தது படம் பார்த்த எல்லாருக்கும் நன்றாக நினைவிருக்கும். ஆனால் அசல் வாழ்க்கையிலும் ஒரு விஷயத்தில் அவர் சபாபதியைப் போலவே விளங்கியது பலருக்குத் தெரிந்திராது. அதுதான் படிப்பு விஷயம். 'கட்டுப் போட்டாலும் படிப்பு வராதுடா' என்று பேச்சுக்குச் சொல்வதுண்டு. ஸ்ரீ டி. ஆர். ராமச்சந்திரன் அவர்களைக் கோதண்டத்திலேயே போட்டுப் பார்த்தார்கள். ஒன்றும் நடக்கவில்லை. பள்ளியில் நுழைந்ததும் உபாத்தியாயர் கட்டளை யிடுமுன்னர் ஸ்ரீ ராமச்சந்திரன் தாமாகவே தண்டனையை மேற்கொண்டு கோதண்டத்தில் தொங்க ஆரம்பித்து விடுகிற நிலைக்குப் போய்விட்டது! பக்கத்து ஊரில் நாடகம் பார்க்க அடிக்கடி போய் வருவார். அதிலேதான் அவருக்கு ஆர்வம் இருந்தது. கடைசியில் ஒருநாள் பெற்றோரைத் தைரியமாகக் கேட்டே விட்டார். ''எனக்குப் படிப்பு வரப் போவதில்லை. ஏன் சிரமப்படுகிறீர்கள்? நாடகத்தில் சேர்ந்து விடுகிறேன்'' என்றார். அவர்களுடைய ஆசியைப் பெற்றுக்கொண்டு கிளம்பினார். நாடகக் கம்பெனிகள் என்றைக்குத்தான் தமிழ் நாட்டில் பணத் தட்டுப்பாடு ஏதுமின்றி நடந்திருக்கின்றன? சந்தர்ப்பச் சூழ்நிலையின் காரணமாக நடிகர்கள் பலவிதத்திலும் அநாதைகளாகத் தவிக்கவேண்டி வந்தது. ஒருமுறை அவரும் அவரைப் போன்ற இளைஞர்கள் பலரும் உஞ்சவிருத்திகூட எடுக்கும்படியாகிவிட்டது. பங்களூரில் நாடகக் கோஷ்டியுடன் தங்கியிருந்த சமயம். ஒருநாள் திரு ஏ. டி. கிருஷ்ணசாமி அவர்கள் ஸ்ரீ ஏவி. எம். அவர்களை நாடகம் பார்க்க அழைத்து வந்தார். பின்னர் ஏவி. எம். இவர்கள் தங்கியிருந்த முகாமுக்கு வந்து, ''என்ன தம்பி, சினிமாவில் நடிக்க உனக்கு விருப்பமா?'' என்று கேட்டதும் திரு ராமச்சந்திரன் என்ன கூறுவதென்றே தெரியாமல் ஆனந்த மிகுதியில் தம்மையே மறந்து விட்டார் என்பது முழுக்க முழுக்க உண்மை! ஏனெனில் ஏவி. எம். கேட்டுக் கொண்டபடி பூனாவுக்கு ரயிலேறுவதற்குப் பதில் தவறான ரயிலைப் பிடித்து வேறு எங்கேயோ போய்ச் சேர்ந்து விட்டார்! இவ்வாறு நாடகத் துறையில் பட்ட துன்பத்தையும் திரைப்படத் துறையில் புகுந்த விதத்தையும் கூறிய ஸ்ரீ ராமச்சந்திரன் சபாபதி படப்பிடிப்பு பற்றிப் பேச ஆரம்பித்தார்:

''ஏவி. எம். அவர்கள் தயாரிக்கப் போகும் ஹாஸ்யப் படத்தில் எனக்கு ஒரு பாகம் கிடைக்கப் போகிறது என்பதில் எனக்குச் சந்தோஷமாயிருந்தது. ஆனால் இன்னொரு விதத்தில் பயம் என்னை வாட்டியெடுத்தது. பயத்துக்குக் காரணம், ''சபாபதி''யில் நான் யார் யாருடனெல்லாம் நடிக்க வேண்டும் என்பது தெரிந்ததுதான். ஒரு பக்கம் காளி அண்ணு (காளி என். ரத்தினம்) மறுபக்கம் சாரங்கண்ணு (கே. சாரங்கபாணி) இடையிலே நான்! திரு ஏவி. எம். அவர்களிடம் என் பயத்தைச் சொல்லிப் பார்த்தேன். அவர் அதைப் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை. படம் வெளி வந்து பார்த்து முடித்ததும் திரு சம்பந்த முதலியார் இளைஞனுகிய என்னை அப்படியே கட்டி அணைத்துக் கொண்டு கன்னத்தில் முத்தம் கொடுத்து ஆசீர்வதித்தார். திரு என். எஸ். கே. யும் வேறு நாயகரும் நேரில் வந்து







என்னைப் பாராட்டி உற்சாகமூட்டிச் சென்றார்கள். 'நீ நம்ம கோஷ்டியைச் சேர்ந்தவனப்பா' என்று தட்டிக் கொடுத்து உரிமை கொண்டாடினர் ஸ்ரீ என். எஸ். கே.''

ராமச்சந்திரன் இதை உணர்ச்சிப் பெருக்கோடு கூறினர்.

இந்தக் காலத்தைப் போல் அக்காலத்தில் படாதிபதிகள் நட்சத்திர மோகம் பிடித்து அலையவில்லை. புதுப் புது நட்சத்திரங்களைத் திரைவானில் சிருஷ்டித்து வந்தார்கள். அவர்களுள் திரு ஏவி. மெய்யப்பன் மெய்யான பாராட்டுக்கு உரியவர். பல புது முகங்களைக் கண்டெடுத்த பெருமை அவரையே சேரும்.

''சபாபதி''யைக் கொஞ்சம் நினைவுபடுத்திக் கொள்ளுவோம்.

கே. சாரங்கபாணி அதில் செந்தமிழ்ப் பண்டிதராய்த் தோன்றி எல்லாரையும் சிரிக்க வைக்கிறார்.

அந்தத் தமிழ் வாத்தியாரின் மாணவன் சபாபதியாகக் காளி என். ரத்தினம் வந்து ரகளை கட்டியது கொஞ்சநஞ்சமல்ல. அம் மாணவன் ரயிலைப்பற்றி எழுதிய வியாசத்தில் ரயிலானது 'குப், குப், குப், குப்...' என்று செங்கற்பட்டு வரையில் போய்க் கொண்டேயிருக்கிறது. இந்தக் கட்டத்தில் 'குப்'பென்று சிரிக்காமல் இருக்க முடியாது. அதோடு '' பரீட்சை 'பழுல்' ஆயிடுத்தா அப்பா? சரி, அப்பா!'' என்றும் சென்னைப் பட்டணத்துக்கே உரிய பாணியில் ''ஆமாம்ப்பா!'' ''சரி அப்பா!'' என்றும் அடிக்கடி கூறியதை யார்தான் மறக்க முடியும்? எஜமான் கொடுத்த சில்லறையைக் கையில் வைத்துக் கொண்டு ''எந்தக் கால் ரூபாய்க்குப் பாதம் அல்வா? எந்தக் கால் ரூபாய்க்குப் பக்கோடா?'' என்று காளி என். ரத்தினம் கேட்டதை இப்போது நினைத்தாலும் சிரிப்பு வருகிறதே!

சிரித்து மகிழவும், மகிழ்ந்து ரஸிக்கவும் ரசித்துச் சுவைக்கவும் பூரண தகுதி பெற்றிருந்த படமாகிய ''சபாபதிக்கு வேறொருவன் சமானமாவானு?'' என்று இப்பொழுது கூடப் பாடத் தோன்றுகிறது! —விஜயம்



# ஈறு உபாதைகள், பற்சிதைவு போன்ற கோளாறுகளிலிருந்து

# *வியக்கத்தக்க பலன்கள்*

**தாமாகவே விரும்பி எழுதப்பட்ட கடிதங்கள் பற்களுக்கு நற்பலனளிக்கும் போர்ஹான்ஸ் பற்பசையின் தன்மையை நிரூபிக்கின்றன.**

பல ரகமான பற்பசைகளை உபயோகித்த பின்னர், எனது 50 வது வயதில் போர்ஹான்ஸ் பற்பசையை உபயோகிக்கத் தொடங்கினேன். கடந்த 20 வருடங்களுக்கு மேலாக அதை உபயோகித்து நல்ல பலன் அடைந்துள்ளேன். ஒருவேளை, என் 72-வது வயதில் என்னுடைய பற்கள் இயற்கையானபடி வலுவாகவும், சீராகவும் இருப்பதற்குக் காரணம் போர்ஹான்ஸின் மாயவித்தையாகவும் இருக்கலாம்.

ஜி. என்., மதுரை

---

நான் தங்களுடைய போர்ஹான்ஸ் பற்பசையை கடந்த 20 வருடங்களுக்கு மேலாக உபயோகித்து வருவதால், எனக்கு இன்று 65 வயதும் 5 மாதங்களும் வயதாகியும் என்னுடைய 32 பற்களும் இன்னமும் வலுவுடனும், ஆரோக்கியத்துடனும் இருக்கின்றன. நானது தேதிவரை நான் எவ்விதமான பற்கோளாறினாலும் அவதிப்பட்டதில்லை.

டி. என். டி., அஸ்ஸாம்

---

எனக்கு போர்ஹான்ஸினால் ஏற்பட்ட நல்ல பலனைக்கண்டபின், இப்போது என் குடும்பத்தில் எல்லோரும் போர்ஹான்ஸையே உபயோகிக்கிறார்கள். அதற்கு முன்னால், நான் எப்பொழுதும் பல்வலி மற்றும் ஈறு உபாதையால் அவதிப்பட்டுவந்தேன். இப்போது போர்ஹான்ஸின் பலனால், என் பற்கள் வெண்மையாகவும், உறுதியாகவும், ஈறுகள் வலுவாகவும் இருக்கின்றன பல வருடங்களாகவே, எனக்கு ஈறுகளில் புண் ஏற்பட்டதில்லை. அப்பப்பா! நான் வேறெந்தப் பற்பசையை உபயோகிப்பதாகக் கனவுகூட காணமாட்டேன்.

ஜி. எஸ்., டில்லி

---

* இந் நற்சாட்சிக் கடிதங்களை ஜாப்ரே மானேர்ஸ் & கோ. லிட்., கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

**ஓர் பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட பற்பசை**




இதற்கு உகந்த, சிறந்த சேர்க்கைக்கு, போர்ஹான்ஸ் *டபிள் ஆக்ஷின்* டூத் பிரஷ் உபயோகியுங்கள்.



இந்த டூத் பிரஷ் மட்டுமே உங்கள் பற்களைச் சுத்தம் செய்வதோடு, ஈறுகளையும் இதமாகத் தடவிக் கொடுக்கிறது.



### அத்தியாயம் ஏழு

## கழறிற்றறிவான்

கார்காலத்து இருண்ட வானம் உறுமிக் குமுறுவது போன்ற பேரோசை! எங்கோ, வெகுதூரத்துக்கு அப்பால் இருந்து எழுந்த யானையின் பிளிறல்ஒலிதான் அப்படிக் கேட்டது!

ஒலிகளுக்கெல்லாம் முதல் ஒலியாய், உயிர்களுக்கெல்லாம் மூலாதாரமாய், பொருள்களுக்கெல்லாம் மூலப் பெரும் பொருளாய் விளங்கி அமர்ந்திருந்த வாதாபி கணபதியின் சந்நி

# பத்தினிக் கோட்டம்

**ஜெகசிற்பியன்**



தானத்திலே தன்னை மறந்து நின்று கொண்டிருந்த பரமேசுவர வர்மனின் செவிகளிலும் அந்த யானையின் பிளிறல் ஒலி விழத்தான் செய்தது. ஆனால் அப்பேரொலி, வெளியிலிருந்து வந்து இறங்குவதாக அவனுக்குத் தோன்றவில்லை; தன் உள்ளத்திலிருந்தே எழுந்து செவிக் குழியில் நிறைவதாக எண்ணி, அவ்வொலியின் அதிர்ச்சியில் ஏதோ ஓர் இன்பத்தை நுகர்பவன்போல் — அந்த ஒலியிலேயே ஒன்றி ஐக்கியமாகிவிட விழைபவன் போல் — விநாயகரின் அருள் பொழியும் திருமுகத்தைக் கண்ணிமைக்காமல் பார்த்தவாறு நின்றிருந்தான் அவன்.

''விரிந்து பரந்த கடல் 'ஓ' என்ற ஓசையை எழுப்புகிறது. வெள்ளிய சங்கினை எடுத்துச் செவியில் பொருத்தினால் 'ஓ' என்னும் ஒலியே கேட்கிறது. இயற்கையாய் எழும் இந்த 'ஓ' என்ற ஓசையே 'ஓம்' என்னும் ஓங்கார ஒலியாய், பிரணவ நாதமாய்ப் பரிணமிக்கிறது. 'ப்ரண' என்றாலே 'பழைய' என்றுதான் பொருள். அதாவது, பழைமைக்கும் பழைமை, முதன்மைக்கும் முதன்மை என்பது கருத்து. இப்படிப் பழைமையிலும் பழைமையான,

முதன்மையிலும் முதன்மையான 'ஓ'என்னும் ஒலியே, ஒலிகளுக்கெல்லாம் மூல ஒலியாய், ஒலிகளை உருவாகக் கொண்ட எழுத்துக்களுக்கெல்லாம் உயிர் முதல் எழுத்தாய் நின்று, அவ்வொலியை இயற்கையாக எழச் செய்யும் சங்கின் வடிவாகவும், அதனை உணர வைக்கும் செவியுறுப்பின் உருவாகவும் அமைந்தது. ஒளி வடிவான இறைவன் ஒலி வடிவாகவும் இருக்கிறான். எல்லாவற்றுக்கும் மூலகாரணனான அவன், எல்லா ஒலிகளுக்கும் முதல் ஒலியான 'ஓ'என்ற ஒலியின் எழுத்துருவமாகவும் விளங்குகிறான். அவனது அந்த அற்புத ஒலியுருவத்துக்கு 'ஓ' என்னும் எழுத்தைப் போன்றதோர் இன்னொரு வடிவம் என்ன? உடலை வளைத்துப் போட்டுப் படம் எடுத்து நிற்கும் பாம்பைச் சொல்லலாம்; அதேபோல் அதனினும் சிறப்பான இன்னொரு வடிவம் என்ன? நீண்டு சுருண்ட துதிக்கையுடன் கூடிய யானையின் முகமே அதற்குச் சரியான வடிவமாய் அமைந்திருக்கிறது. எல்லா உயிரினங்களிலும் பெரியதாக — வலிமை மிக்கதாக — விளங்கும் யானை, தன் உணவுக்கென உயிர்க்கொலை செய்யாமல் பசிய தழைகளையும் தாவரத் தண்டுகளையுமே உண்டு தன்பால் அன்பு செலுத்துவோரிடம் தனது வலிமையைக் காட்டாமல் அடங்கி யொடுங்கி அன்பு காட்டி அவர்களுக்கு வேண்டும் உதவிகளையெல்லாம் செய்கிறது. இதே போன்றுதான் மூத்த முதல்வராம் முன்னறி நாயகர் ஓங்கார நாதத்தின் எழுத்து வடிவான வேழ முகம் தாங்கி வந்து மனிதர்கள் வேண்டும் வரங்களையெல்லாம் வரையிலாது வாரி வழங்குகிறார். இதோ,, இங்கு வீற்றிருக்கும் வாதாபி கணபதியும் எளியேனை நான் வேண்டும் வரத்தை வழங்கியே தீருவார். அவர் அவ்வரத்தை எனக்கு வழங்கச் சித்தம் கொண்டு விட்டார் என்பதற்கு அறிகுறியாகத்தான் அவரது ஓங்கார நாத ரூபம் என் உள்ளத்திலிருந்து எழுந்து செவிகளில் இறங்கி ஒலிக்கிறது!...''—இவ்வாறு தனக்குள் மந்திர வாசகம் செய்து கொண்டே தன்னில் தான் நின்று லயித்தவனாய் அந்த வாதாபி கணபதியின் சிறிய கோயிலை மும்முறை வலம் வந்து கும்பிட்டு நிமிர்ந்த பரமேசுவரவர்மன், திடுக்குற்றவன் போல் தலை தூக்கிச் சுற்றுமுற்றும் பார்த்தான்.

தொலைதூரத்துக்கு அப்பால் கேட்டுக் கொண்டிருந்த யானையின் பிளிறல் ஒலி இப்போது மிகச் சமீபத்தில் நெருங்கிக் கேட்டது.

இதனால் பரபரப்படைந்த அவன், எதிரே வீற்றிருந்த விநாயகரின் முகத்தை உற்று நோக்கினான். உலகத்தின் ஒலிகளுக்கெல்லாம் மூலாதார சுருதியாய் விளங்கும் அவர் ஒலிப்புலன் அற்ற கட்செவியார் போல் மௌனமாக அமர்ந்திருந்தார்.

பிளிறல் முழக்கம் இப்போது பன்மடங்காகியது. அத்துடன், மரஞ்செடி கொடிகள் முறிந்து சாயும் ஒலியும் சேர்ந்து எழுந்தது.

சடாரென்று திரும்பிய பரமேசுவர வர்மன் அந்த ஞாழற் கோயிலை விட்டு வெளியே விரைந்து வந்தான்.

இது என்ன ஆச்சரியம்! அதோ, வெறி கொண்ட நிலையில் ஆவேசப் பிளிற விட்டு அந்தக் காட்டுப் பிரதேசத்தையே அதிரடித்துக் கொண்டு ஓடி வருகிறது ஒரு கொம்பானை!

வியப்பின் மிகுதியால் வேர் பாய்ந்து நின்று, பயங்கர மூர்க்கத்துடன் தறிகெட்டு ஓடி வரும் அந்த யானையையே விழி புரட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த பரமேசுவரவர்மனின் மனத்தில் ஒரு சந்தேகம் எழுந்தது: 'என் கண்ணெதிரே காணும் இந்தக் காட்சி உண்மையானதுதானா? அல்லது இவ்வளவு நேரம் வாதாபி கணபதியின் சந்நிதானத்திலே நின்று அவரது மனமோகன வடிவத்தை நெஞ்சகத்தில் நிறுத்தி வெற்றி வரம் வேண்டி நின்றதால் அதன் உருவெளியாக இவ்வீறார்ந்த காட்சி தென்படுகிறதா?' — அவசரத் துடிப்புடன் கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டு இன்னும் சற்றுத் தூரம் ஓடிப் போய் நின்று அந்த யானை





யைக் கூர்ந்து நோக்கினான் அவன்.

புழைக் கையை வானோக்கித் தூக்கிவளைத்துச் சுழற்றி எதிர்ப்பட்ட மரஞ் செடி கொடிகளையெல்லாம் முறித்துச் சாய்த்து மிதித்துத் துவைத்துக் கொண்டு கோபாவேசத் திமிறலுடன் ஞாழற் கோயிலை நோக்கி வந்து கொண்டிருந்த அந்த வேழம் சடாரென்று திரும்பிச் சென்னி வாய்க்கால் கரைச் சரிவுப் பக்கமாக ஓடத் தொடங்கியது. பரமேசுவரவர்மனும் அதைப் பின்தொடர்ந்து ஓடுபவன்போல் ஓடி வாய்க்கால் கரை மேட்டில் ஏறி நின்றுகொண்டு அந்த யானையை அரக்கப் பரக்கக் கூர்ந்து நோக்கினான்.

'இது என்ன விந்தை! என் பட்டத்து யானை அரிவாரணம்போல் அல்லவா இது தோன்றுகிறது?.... காஞ்சி அரண்மனையில் இருந்த என் அன்னையாரைச் சளுக்கியர்கள் சிறைப் பிடித்துக் கொண்டுபோய்ப் பல்லவ அரண்மனைக் கோட்டையில் அடைத்து வைத்திருப்

பதுபோல் இந்த யானையையும் இழுத்துச் சென்று அங்கே கட்டிப் போட்டு வைத்திருந்தார்களே! அங்கிருந்து எப்படி வெளியேறி வந்திருக்கும்?... ஓ.... இதன்மீது யாரோ பயணம் செய்து வந்ததற்கு அறிகுறியாக அதன் முதுகில் அம்பாரிக் கட்டுகள் தென்படுகின்றனவே?.... அப்படியானும் அம்பாரி எங்கே? அதை எங்கேனும் அடித்துச் சாய்த்து இழுத்தெறிந்து விட்டதோ?'

துள்ளிப் பாய்ந்து மேலும் சற்றுத் தூரம் ஓடிப் போய் நின்ற பரமேசுவர வர்மன் தன் பார்வையை வெகு தீர்க்கமாகச் செலுத்தி நோக்கினான்.

'கண்மண் தெரியாமல் தறிகெட்டு ஓடும் அந்த யானையின் விலாப் பக்கம் ஏதோ வதங்கிய பூமாலை போல் சரிந்து தொங்கலாடுகிறதே. அது என்ன? அதற்கு அலங்காரமாகச் சூட்டிய மாலையாக இருக்குமோ?... அல்லது அம்பாரியில் வந்தவர் அணிந்திருந்த பட்டுத் துகிலாக இருக்குமோ?...இல்லை, இல்லை; அது ஒரு மனித உருவமாகத் தோன்றுகிறது!.... அதிலும் ஒரு பெண் உருவம் போலவே தோன்றுகிறது!... யார் அந்தப் பெண்மணி?'

இயற்கையாகவே அவனிடம் அபரிமிதமாகக் குடிகொண்டிருந்த மனிதாபிமான உணர்ச்சியும், இடுக்கண் களையும் இரக்கச் சிந்தையும் இப்போது பொங்கிப் பீறிட்டு விடவே, தன்னை மீறிய ஒரு துடிப்புத் துணிவுடன் — தான் யார், தனது நிலை என்ன என்பவற்றையும் மறந்து-வீசியெறிந்த வேலைப்போல் அந்த யானையை நோக்கி விரைந்தோடினான்.

எட்டுத் திக்கும் எதிரொலி கிளம்ப ஒரு பயங்கரப் பிளிறல்!

யானைப் பிளிறல் போல் எழுந்து முழங்கிய அந்த ஒலி உண்மையில் யானையின் பிளிறல் அல்ல; பரமேசுவர வர்மன்தான் அப்படி ஒரு விசித்திர ஒலியை எழுப்பிக்கொண்டு ஓடினான்.

வெறி கொண்ட அந்த யானை முன்னிலும் வேகமாக ஓட ஆரம்பித்தது. பரமேசுவரவர்மன் மீண்டும் அதே போன்ற பயங்கரப் பிளிறல் ஓசையை எழுப்பினான். மூர்க்காவேசத்துடன் ஓடிக் கொண்டிருந்த அந்த முரட்டுயானை, ஏதோ பாறை மீது மோதிக் கொண்டாற் போல் சடாரென்று சுழன்று திரும்பியது.

''அரிவாரணா!......''

மத்தகத்தை மேலுயர்த்தி வளைத்துத் தன் முறக் காதுகளை முன்னால் சாய்த்துக் கருங் குன்றம்போல் ஆடாது அசையாது நின்றது அரிவாரணம்.

அந்தச் சென்னி வாய்க்காலின் மேற்குப் புறமாகக் 'கூற்றன் வாய்' என்னும் பெயருடன் அமைந்திருந்த ஒரு மதகு மேட்டின்மேல் ஏறி நின்ற பரமேசுவரவர்மன் தன் இரு கைகளையும் வாயில் வைத்துக் குவித்து முன்போலவே விசித்திர ஒலியொன்றை எழுப்பினான். அது வெறும் ஒலி நீட்டலாக இல்லை; ஏதோ ஒரு மொழியில் சில சொற்களைச் சேர்த்துக் கூவுவதாகவே கேட்டது.

ஆமாம்; அது ஒரு மொழிதான். அறுபத்து நான்கு கலை ஞானங்களில் ஒன்றான பைபில வாதம் என்னும் கலையில் நன்கு தேர்ச்சியடைந்திருந்த பரமேசுவரவர்மன், விலங்குகள், பறவைகள் முதலானவை கழறும் மொழிகளை அறியும் திறனும், அவற்றுடன் பேசும் வல்லமையும் பெற்றிருந்ததாலேயே இப்போது யானைக்குரிய மொழியில் அப்படியொரு விசித்திரக் குரல் எழுப்பிக் கூவினான்.

தொலைதூரத்துக்கு அப்பால் குன்றென நின்று கொண்டிருந்த களிறு, அவனுடைய கூப்பாட்டுக்கு மறுமொழி தருவதுபோல் தன் இரு கால்களையும் மேலே உயர்த்திப் பரிதாப ஓலமாக ஒரு நீண்ட பிளிறலிட்டது.

''அரிவாரணா!....''

வலக் கையை ஆட்டிப் பெருங் குரலெடுத்துப் பிளிறிய பரமேசுவரவர்மன் மதகு மேட்டின் மேலிருந்து குதித்திறங்கித் தலைதெறிக்க ஓடினான். மறுகணம், அந்த யானையும் மலையுச்சியிலிருந்து உருட்டித் தள்ளப்பட்ட பாறைபோல் அவனை நோக்கி ஓடி வந்தது.

## அத்தியாயம் எட்டு

# யுக மலர்கள்

மஞ்சள் நீராடிய மாலைக் கன்னிதான் உடுத்திருந்த ரதி வர்ணத் துகிலைக் களைந்து உலர்த்துவதற்காக விரித்து நீட்டிப் போட்டாற்போல் சலசலத்து ஓடிக் கொண்டிருந்த சென்னி வாய்க்கால் கரையோரம் கவலையே வடிவாக அமர்ந்திருந்தான் பரமேசுவரவர்மன். அவனது மடியிலே வதங்கிய பூச்சரமாகத் துவண்டு கிடந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி. சற்றுத் தொலைவில் மரமொன்றின் அடியிலே அமைதியின் மறு உருவாக நின்று கொண்டிருந்தது அரிவாரணம். அதற்குச் சிறிது அப்பால், அவன் ஏறி வந்த குதிரையும் நின்றிருந்தது.

மாலைப் போது மறைவதற்கு முன் புவனத் தாயைத் தரிசித்துவிட வேண்டு

மென்பதற்காகவோ என்னவோ அவசர அலங்கோலத்துடன் வானக் கூரையில் தோன்றி விட்டிருந்த அரை வட்ட நிலா தன் வெளிறிய முகபிம்பத்தைச் சென்னி வாய்க்காலின் தெள்ளிய நீர்ப் பரப்பிலே மிதக்கப் போட்டு அதை உற்று உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தது. அந்த வெளிறிச் சாம்பிய நிலவைப் போலவே தன் மடியில் சாய்ந்துகிடந்த உத்தமசீலியின் களையிழந்த முகத்தைக் கலங்கிய கண்களுடன் குனிந்து பார்த்துக் கொண்டிருந்தான் பரமேசுவரவர்மன்.

அவன் பிரக்ஞை இழந்து விட்டிருந்தான். அவனுடைய சங்குநிற மேனியெங்கும் குருதிக் கோலம் உறைந்திருந்தது. அவனது உள்ளங் கையிரண்டும் செக்கச் சிவந்த செம்பருத்திப் பூக்கள் போல் இரத்தம் கட்டிக் கொப்புளித்து வீங்கியிருந்தன.

'அன்றொரு நாள், பூவுலக அழகையெல்லாம் கவி பாடிக் காட்ட வந்த வானுலக தேவதைபோல் அந்த ஜீனாலயத்துக் குளக் கரைப் படியில் அமர்ந்திருந்தானே, அவ்வெழிலோவியப் பாவையா இவன்? வையத்தின் அவலத்தை யெல்லாம் வாரிக் கொட்டி வார்த்தெடுத்த முற்றுப் பெறாச் சிலை புழுதியில் வீழ்ந்து கிடப்பதுபோல் அல்லவா இப்போது அவன் தோற்றமளிக்கிறான் !'

பெருமூச்சு விட்டு நிமிர்ந்த பரமேசுவரவர்மன் பக்கவாட்டில் சாய்ந்து ஓடை நீரில் ஒரு கை அள்ளி அவனது வெளுத்த முகத்தில் தெளித்து வாயிலும் கொஞ்சம் புகட்டினான். அப்போதும் அவன் மூர்ச்சை தெளியாமல் கண் மூடியே கிடந்தான்.

சளுக்கிய 'விக்கிரமாதித்தனின் அன்புக்கும் பரிவுக்கும் உடையவனாய் — அவனது அழைப்பின் பேரில் — இந்த நாட்டுக்கு வந்து, சகல விதமான பாதுகாப்புக்களுடனும், சுக' சௌகரியங்களுடனும் இலவந்திகைப் பள்ளியில் தங்கியிருந்த இவனுக்கு இந்தக் கதி ஏன் ஏற்பட்டது? எங்கே போக - யாரைக் காண — இவன் பயணப்பட்டு வந்திருப்பான்? இந்த யானையின் முரட்டுக் குணத்தையும் அடங்காத போக்கையும் நன்கு அறிந்தவனான சளுக்கியத் தளபதி வில்வேலி, இதன்மீது இவன் பயணம் செய்ய எப்படி அநுமதித்தான்? தெரியாமல் இந்தத் தவற்றை அவன் செய்து விட்டிருப்பானோ? அல்லது தெரிந்தே திட்டமிட்டு ஏதோ சதி எண்ணத்துடன் இவனைப் பழி வாங்க வேண்டும் என்பதற்காக இவ்வாறு பயணப்பட வைத்திருப்பானோ? அப்படியானால் அதன் காரணம் என்னவா யிருக்கும்?'

பரமேசுவரவர்மனின் உடல் இலேசாக அதிர்ந்தது.

'என்னை இவன் காதலிக்கிறான் என்பதையும், அதனால் என்னைக் கண்டு பிடிப்பதற்காகச் செய்த பெரியதொரு முயற்சியைத் தகர்த்து விட்டான் என்ற விவரத்தையும் , தளபதி வில்வேலி அறிந்து இவனை இந்த வகையில் ஒழித்துக் கட்டத் துணிந்தானோ?'

அவன் சட்டென்று நிமிர்ந்து அங்கே அமைதியாக நின்றிருந்த அரிவாரணத்தை ஏறிட்டுப் பார்த்தான்.

'என்னைத் தவிர வேறு யாருக்குமே அடங்காத இந்த யானை, இவனை அம்பாரியில் அமர்த்தி அனுப்பும் வரையில் எப்படிச் சும்மா யிருந்தது? அப்புறம் ஏன் இப்படி மூர்க்காவேசம் கொண்டு மிரண்டு ஓடி வந்தது? அன்றொரு நாள் அந்தக் குளக் கரையில் என்னைச் சந்தித்த போது. ''கோழை போல் மறைந்து வாழும் நீங்கள் வீரனாக வெளி வர வேண்டும்'' என்ற பொருள்பட



## சமைக்கும்போதே இளைப்பாறலாம்

இந்த அற்புத மண்ணெண்ணெ அடுப்பு கண்டு பிடிக்கும் வரையில் சமையல் என்றுலே மிகக் கஷ்டமான காரியம் என்று கருதப்பட்டு வந்தது. இப்பொழுது நீங்கள் சமைக்கும்போதே இளைப்பாறலாம். கரி உடைக்கும் கஷ்டமோ அடுப்பூதும் சிரமமோ, கண்ணில் புகை மண்டுதலோ இல்லை. சமையலறையில் புகைக்கரி பிடிக்காது. இந்த அடுப்பு துப்புரவானது. எளிதானது. எளிமையானது.

- தூசி, தும்பு, புகை, சத்தமில்லை
- சிக்கனமும் பாதுகாப்புமுள்ளது
- ஸ்பேர் பாகங்கள் கிடைக்கும்



# காஸ் ஜனதா

மண்ணெண்ணெ அடுப்பு

சுவையான சமையல்



சுலபமான சமையல்

தயாரிப்பாளர்கள் :

**தி ஓரியண்டல் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**

77, பௌபஜார் தெரு, கல்கத்தா - 12

---




## குடும்பத்திற்கேற்ற இணையற்ற சோப்

# மார்கோ சோப்

மாதர் மற்றும் குழந்தைகளின் மிருதுவான சருமத்திற்குப் பாதுகாப்பு அளிக்கும் ஹானியற்ற மிருதுவான சோப். துர்க்கந்தம் நீக்கப்பெற்ற வேப்பெண்ணெயிலிருந்து தயாரிக்கப்பட்டு, வாசனையுள்ளதால், சுகாதாரத்திற்கு ஏற்றது. சருமத்தில் மாசுகளின்றி சுத்தமாக வைத்திருக்கும்.

**தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிமிடெட் கல்கத்தா-29**

தென் இந்திய ஆபீஸ் : 5/149, பிராட்வே, சென்னை - 1

என்னிடம் சொன்னுளே, அதன் உட்பொருள் என்ன? சளுக்கிய விக்கிரமாதித்தனையும் அவனுடைய சாம்ராஜ்ய விஸ்தரிப்புச் செயலையும் விரும்பாமல் இருந்தால் தானே அவளால் அப்படிச் சொல்ல முடியும்? தன் சொந்தப் பெரிய தந்தையை அவள் இடரென்று எதிர்க்கவும் வெறுக்கவும் காரணம் என்னவாக இருக்கும்? என்மீது கொண்ட காதலினுல் அவளது மனம் அவ்வாறு மாறிவிட்டதா? அல்லது அத்துடன் வேறு காரணங்களும் இருக்குமா? இதையெல்லாம் தெரிந்து கொண்டுதான் விஸ்வேலி இவளை இத்தனை பயங்கரமாகப் பழி தீர்க்க முனைந்தானே?'

குழம்பித் தவித்த மனத்துடன் அவளைக் கூர்ந்து நோக்கினுன் பரமேசுவரவர்மன்.

'இவளுடைய நிலையைப் பார்த்தால் இப்போதோ இன்னும் கொஞ்ச நேரத்திலோ என் மடியிலேயே தன் ஆவியைப் பிரித்துக் கொள்வாள் போல் இருக்கிறதே! இறைவா, இது என்ன சோதனை!'

அவனுக்கு நெஞ்சு வலித்தது. கண்கள் கலங்கி நீர் கோத்தன. மெல்லக் குனிந்து அவளது மென்மையான நெற்றியில் தன் நெற்றி பட வைத்து, "இளவரசி!" என நடுங்கும் குரலில் அழைத்தான். அவனுடைய விழிகளில் தளும்பியிருந்த கண்ணீர், கூம்பிய காயாம்பூ மலர்களாக மூடிக் கிடந்த அவள் கண்ணிமைப் போர்வைமேல் வழிந்து நிறைந்தது.

அறுத்துப் போட்ட மாதவிக் கொடி போல் அசைவற்றுத் துவண்டு கிடந்த அவளது பூப் போன்ற மென்னுடல் மெல்ல அசைந்ததைக் கண்டு சட்டென நிமிர்ந்தான் பரமேசுவரவர்மன்.

வெளுத்துக் கிடந்த அவள் வதனத்தில் சிறிதளவு ஜீவ களை படர்ந்தது. வறண்ட அதரங்களில் ஈரம் சுரந்தது. இளங்காற்றில் அசையும் நாணற் பூச் செண்டுபோல் அவளுடல் மெல்ல அசைவுற்றது. வைகறையில் மொட்டவிழும் நீலக் குவளை மலர்களென நயனங்கள் மிருதுவாகப் பிரிந்தன.

அவள் அவனைப் பார்த்தாள்.

"இளவரசி! இதோ, நீங்கள் விரும்பிய கோலத்தில் வெளிப்பட்டு வந்திருக்கிறேனே, என்னைத் தெரியவில்லையா?"–ஆழ்ந்த அன்பின் குழைவோடு அவள் முகத்துக்கு நேரே சாய்ந்து புன்முறுவலுடன் கேட்டான் பரமேசுவரவர்மன்.

அவள் உடல் அதிர்ந்தது. வியப்பும் மிரட்சியுமாக இமைகளைப் படபடவெனத் தட்டிக்கொண்டே துடிப்புற்று எழுந்திருக்க முயன்றவள், எதிரே நின்றிருந்த அரியாசனத்தைப் பார்த்துப் பயந்து நடுங்கியவளாய், முறிந்த அல்லித் தண்டுபோல் மீண்டும் அவன் மடியிலேயே சாய்ந்து விட்டாள். திரும்பி வந்த அவளது நினைவும் உணர்வும் மறுபடி கழன்று போய் விட்டன.

திருமஞ்சனமாடி நின்ற மாலைக் கன்னியை அந்தப்புரத்துக்கு அனுப்பி விட்டு அவனுக்குக் காவல் நிற்க வந்த இருட்கிழவியின் கரிய முந்தானையிலே நித்திலப் பூக்களை வாரியிறைத்த நிலா மடந்தை பாலாபிஷேகமும் செய்யத் தொடங்கினுள்.

சிந்தனையில் லயித்தவனாய், ஆந்திர இளவரசியின் வாடிச் சாம்பிய வதனத்தையே பார்த்துக் கொண்டிருந்த பரமேசுவரவர்மன், ஏதோ ஒரு முடிவுக்கு



வந்தவன் போல் பெருமூச்சு விட்டு நிமிர்ந்து சுற்றுமுற்றும் பார்த்தான். பிறகு தன் மடியில் நினைவிழந்து கிடந்த அவளை வாரியெடுத்து மார்பில் சாய்த்தவாறு எழுந்து அரியாசனத்தை நோக்கி நடந்தான்.

"ஐயா!"

துணுக்குற்றுப் பின்னுல் திரும்பினுன் பரமேசுவரவர்மன். சோனக (அராபிய) நாட்டு மிளகு வியாபாரிகள் போல் தோற்றமளித்த இருவர்– தமக்குள் பலத்த சர்ச்சையிட்டுக் கொண்டே அவனை நோக்கி ஓடி வந்தனர்.

அவர்களில் ஒருவன் அவசரமாக முன்வந்து, "ஏனய்யா, பல்லவ மன்னர் பரமேசுவரவர்மரின் ஆட்சிக் காலத்திலே ஒரு மரக்கால் மிளகு ஐந்து

மாடைக் காசுக்கு விற்றது என்கிறேன்; இவன், ஏழு மாடைக் காசு என்கிறான். எங்களில் யார் சொல்வது சரி, ஐயா?'' என்று பணிவு கலந்த ஆத்திரத்துடன் கேட்டான்.

புன்முறுவல் பூத்த பரமேசுவரவர்மன், ''இப்போது ஒரு மரக்கால் மிளகு என்ன விலை?'' என்று வினவினான்.

இவ்வளவு நேரம் அவனையும் அவன் அணைப்பில் துவண்டு சாய்ந்து கிடந்த உத்தமசீலியையும் குறுகுறுவெனப் பார்த்துக் கொண்டிருந்த இன்னொரு வியாபாரி சட்டென்று முன்னால் வந்து, ''ஆறு மாடைக் காசு ஐயா!'' என்று சலிப்புடன் கரகரத்தான்.

அவ்விருவரையும் கூர்ந்து நோக்கி மெல்லச் சிரித்த பரமேசுவரவர்மன் அமைதியாகச் சொன்னான்: ''ஏழு மாடைக் காசு என்பவர் 'சளுக்கிய மன்னன் வாழ்க' என்று கோஷமிடட்டும்; ஐந்து மாடைக் காசு என்பவர், 'பல்லவ மன்னன் வாழ்க' என்று கோஷிக்கட்டும்; இப்படிக் கோஷித்தால் உங்களிடையே வித்தியாசப்படும் அந்த ஒரு மாடைக் காசு ஒழிந்து போய் விடும்!''

அவ்விரு வியாபாரிகளும் ஒருவரையொருவர் அர்த்தபுஷ்டியுடன் பார்த்து விழித்தனர். அதைக் கடைக்கண்ணால் கவனித்துக் கொண்ட பரமேசுவரவர்மன், அரிவாரணத்தின் பக்கம் திரும்பி அதன் காதில் ஏதோ சொன்னான். உடனே உற்சாகமாகப் பிளிறிக் கழன்ற அந்த யானை மெல்ல முழந்தாளிட்டது. ஒரு கையால் உத்தமசீலியை அணைத்துச் சாய்த்துக் கொண்டு, மறு கையால் யானையின் செவியைப் பற்றி ஏறி அதன் பிடரியில் அமர்ந்தான். எழுந்து நின்ற அரிவாரணம், சற்றுத் தொலைவிலிருந்த அவ்விரு வியாபாரிகளையும் பார்த்துப் பயங்கர உறுமலிட்டுக் கொண்டே விரைந்து நடந்தது.

அதைப் பின்தொடர்ந்து குதிரையும் சென்றது.

பயப் பிராந்தியுடன் பின்னால் ஓடி வாய்க்கால் கரை மேட்டில் ஏறி நின்ற சோனக வியாபாரிகளில் ஒருவன், தன் இடையில் சுருட்டிச் செருகி வைத்திருந்த ஓவியக் கிழியொன்றை அவசரப் பரபரப்புடன் எடுத்துப் பிரித்து நிலவொளியில் வைத்து உற்று நோக்கினான். அன்றொரு நாள் பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளியில் சளுக்கியத் தளபதியின் கட்டளைக்கிணங்கப் பரமேசுவரவர்மன் தன் உருவத்தை ஓவியமாகத் தீட்டி உத்தமசீலியிடம் கொடுத்துவிட்டு வந்தானே, அந்த ஒரு கண் அழிந்த ஓவியம்தான் அதிலே மங்கலாகத் தென்பட்டது!

(தொடரும்)

# பிறந்த நாள் பரிசு

படுசுட்டிப் பயல் குமார். நன்றாகப் படிப்பான்; ஓட்டமாக ஓடுவான்; விளையாடுவான்.

அவனுக்குப் பிறந்த நாள். அருமை மைந்தன், ஒரே பிள்ளை, சமர்த்துக் குழந்தை — அப்படியிருக்கும்போது பெற்றோர்களின் மகிழ்ச்சிக்குக் கேட்கவா வேண்டும்?

சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் ''அப்பா! அந்த அறையை எதற்காகப் பூட்டி வைத்திருக்கு?'' என்றான் குமார்.

''அதிலேதான் உன் பிறந்த நாள் பரிசு இருக்கிறது! சாப்பிட்டு முடித்து விட்டு வா; காட்டுகிறேன்!'' என்றார் அப்பா.

கைகழுவிக் கொண்டு வந்து சேர்ந்தான் அப்பாவிடம். ''கண்களை மூடிக் கொள்!'' என்றார் அவர். அம்மாவும் பாட்டியும் பக்கத்தில் வந்து நின்று கொண்டார்கள்.

''கண்ணைத் திற!'' என்றார் அப்பா.

என்ன ஆச்சரியம்! புத்தம் புதிய 'ஸ்கூட்டர்!' இடது காலை அதில் ஊன்றி வலது காலால் தரையில் நாலு தரம் உந்தினால் சைக்கிள் மாதிரியே போகும்!

அப்பாவைக் கட்டி அணைத்துக் கொண்டான் குமார். ''டேய்! இந்த ஸ்கூட்டரை நீ உடைக்காமல் ஜாக்கிரதையாக வைத்துக் கொண்டால் அடுத்த வருஷம் உன் உயரத்துக்கு ஏற்றாற்போல் குட்டி சைக்கிளே வாங்கித் தருவேன்!'' என்றார் அப்பா.



ஸ்கூட்டரை எடுத்துக் கொண்டு மைதானத்துக்குக் கிளம்பி விட்டான் குமார்.

நிமிஷங்கள் ஓடின. ''மணி ஆறரை ஆகப் போகிறதே; இன்னும் குமாரைக் காணோமே?'' என்று விசாரப்பட்டாள் அவன் அம்மா.

அதே சமயத்தில் உள்ளே நுழைந்தான் குமார். ''அப்பா!'' என்று அழைத்தான்.

''என்னடா?''

''ஸ்கூட்டரை உடைக்காமல் வைச்சுண்டால் அடுத்த வருஷம் சைக்கிள் வாங்கித் தருவதாய்ச் சொல்லி இருக்கிறீங்க, ஞாபகம் இருக்கா?'' என்று கேட்டான்.

''நான் மறக்க மாட்டேன்டா; கவலைப் படாதே'' என்றார் அப்பா.

''அதற்கில்லை அப்பா; அடுத்த வருஷம் பிறந்த நாளைக்கு நான் உனக்குச் செலவு மிச்சம் பண்ணியிருக்கிறேன்'' என்றான் சுட்டிப் பயல் குமார். அவன் அப்பாவும் அம்மாவும் ஒரேயடியாகச் சிரித்தார்கள்.

# Firestone

## பயர்ஸ்டோன்

## தூரத்திற்கும் உழைப்பிற்கும் உங்களுடைய சின்னம்

உலகெங்கிலும் கோடிக்கணக்கான மோட்டார் மற்றும் டிரக் ஓட்டுபவர்களுக்குச் சில சிறந்த காரணங்களினால் பயர்ஸ்டோனின் மீது தனி மதிப்பு! டயர் மற்றும் ரப்பர் ஆராய்ச்சியில் உலகில் பயர்ஸ்டோன் முன்னணியில் நின்று இன்று சிறந்த டயர்களையும் நாளை மேலும் சிறந்தவைகளையும் தயாரித்து வருகிறது. கடந்த 22 ஆண்டுகளாக இவ்விதமே பயர்ஸ்டோன் இந்தியாவில் டயர்களைத் தயாரித்து வந்திருக்கிறது. உண்மையாகவே, உங்கள் காரில் பயர்ஸ்டோன் டயர்களை விட வேறெந்த பாகமும் பூராவாகச் சோதித்து நிரூபிக்கப்பட்ட கல்ல. பயர்ஸ்டோன் வாங்கும்பொழுது நீங்கள் எதைப் பெறுகிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியும்!




கூடுதலான பாதுகாப்பு மற்றும் சிக்கனத்திற்கு

பயர்ஸ்டோன்

நியூ டீலக்ஸ் சாம்பியன் டயர்களைத் தேர்ந்தெடுங்கள்



# பரிசு பெறும் பெண்கள்

குண்டுமணி

லேடிஸ் கிளப்பைப் பற்றிப் பல ஹாஸ்யங்கள் உண்டு. அவற்றில் ஒன்றை நினைவுபடுத்தலாம். ஒரு நாள் லேடிஸ் கிளப் அங்கத்தினர் ஒருத்தி தன் கணவனிடம், ''நீங்கள் ஆபீசை விட்டு வரும் போது நினைவாக ஒரு டென்னிஸ் மட்டை வாங்கி வாருங்கள்!'' என்றாள். ஹோம் டிபார்ட்மெண்ட் கட்டளை யிட்டு விட்டால் உடனே அதை நிறைவேற்ற விட்டால் சரிப்படுமா? அன்று மாலையே புதிய டென்னிஸ் மட்டை வந்து விட்டது. தன் மனைவி விளையாட்டில் கவனம் செலுத்துகிறாள் என்ற திருப்தியில் இருந்தான் அவள் கணவன். இரண்டு மூன்று நாட்கள் கழித்ததும் அந்த டென்னிஸ் மட்டை கேட்பாரற்று மூலையில் கிடந்தது. அன்று அவள் கணவன் ஆபீசுக்குப் புறப்படும்போது, ''இன்று நீங்கள் வரும் போது நிட்டிங் ஊசியும், நூலும் வாங்கிக் கொண்டு வரேளா?'' என்றாள்.

''ஆமாம்! டென்னிஸ் மட்டை வாங்கினையே? கிளப்பில் விளையாடறதில்லையா?'' என்று கேட்டான் அவள் கணவன் அழாக் குறையாக.

''விளையாடறதுக்கா வாங்கினேன்? என் தோழிகள் பங்கஜம், வனஜா எல்லாரும் முதலில் டென்னிஸ் மட்டை வாங்கினார்கள். நானும் வாங்கா விட்டால் நன்றாயிருக்குமோ? இப்போ அவர்கள் நிட்டிங் ஊசியும் நூலும் வாங்கப் போறா! நானும் அவற்றை வாங்க வேண்டாமா?'' என்றாளாம்.

இதைக் கேட்டு அவள் கணவன் மூர்ச்சை யானால் அதில் அதிசயம் என்ன இருக்கிறது?

லேடீஸ் கிளப் என்றால் அங்கு வம்பு பேசுவதற்கும் பெருமை பேசுவதற்கும்தான் இடம் என்று சொல்வதுண்டு. ஆனால் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக மட்டுமின்றி ஆண்களைவிடச் சிறப்பாகவேகூட அரிய பெரிய காரியங்களை லேடீஸ் கிளப்புகளைச் சேர்ந்த பல பெண்மணிகள் செய்து வருகின்றார்கள். இந்நாளில் லேடிஸ் கிளப் சமூக சேவையிலும், விளையாட்டுகளிலும் ஈடுபட்டு வருகிறது.

மந்தைவெளிப் பாக்கம் லேடிஸ் கிளப் நிர்வாகிகள் நோயற்ற வாழ்வுக்கு விளையாட்டுக் கலை அவசியம் என்பதை நன்கு உணர்ந்திருப்பதால், அந்தக் கலையில் ஆர்வம் ஏற்பட டென்னிஸ் விளையாட்டுப் போட்டிகளைச் சமீபத்தில் நடத்தினர்.

தலைசிறந்த ஆட்டக்காரர்களுக்காக நிகழ்ந்த போட்டியில் குமாரி லக்ஷ்மி மகாதேவனும், பொப்பிலி குமார ராணியும் கலந்து கொண்டனர். இவர்கள் தென்னிந்திய 'சாம்பியன் ஷிப்' இரட்டையர் ஆட்டத்தில் மைசூரின் பிரசித்திபெற்ற ஆட்டக்காரர்களான மிட்டி டாரு, மிஸ் சகிலா ஆகிய இருவரையும் வென்று சென்னைக்குப் பெருமை தேடிக் கொடுத்தவர்கள். இறுதி யாட்டத்தில் இவர்களோடு மிஸ் இந்திரா சாம்பசிவமும், ஸ்ரீமதி கோபிநாத்தும் போட்டியிட்டனர். 'லேடிஸ் கேம் தானே சுமாராகத்தான் இருக்கும்' என்று நினைத்துக்கொண்டிருந்தவர்கள் அன்றைய ஆட்டத்தைப் பார்த்துப் பிரமித்துப் போயினர். ஸ்ரீமதி கோபிநாத் மின்னல் தாக்குதல் போல் சில தடவை பந்தையடித்தார். மிஸ் இந்திராவோ பந்தை எடுக்க முடியாத இடத்தில் தள்ளித் தம் திறமையைக் காட்டினார். ஆனால் இவர்கள் ஆட்டத்தை மிஞ்சும்வகையில் குமாரி லக்ஷ்மியும், பொப்பிலி குமார ராணியும் இணைந்து நன்றாக ஆடி வெற்றி யடைந்தனர்.

நல்ல தலைசிறந்த ஆட்டம் உள்ளவர்களுக்குத்தான் பரிசு என்பதில்லை; லேடிஸ்கிளப் அங்கத்தினர்களுக்காக ஒரு டென்னிஸ் போட்டி வைத்து, அதில் வெற்றி பெற்றவர்களுக்குச் சென்னை கவர்னர் அவர்களின் மனைவியாரைக் கொண்டு பெரிய பெரிய கோப்பைகளை அளிக்கச் செய்தது, மற்ற அங்கத்தினர்களும் டென்னிஸ் ஆட்டத்தில் ஆர்வத்துடன் கலந்து கொள்ளத் தூண்டுகோலாய் இருக்கும்.

லேடிஸ் கிளப்பென்றால், வெறும் வம்பு மகாசபையல்ல, அங்கு விளையாட்டுக் கலைக்கும் இடமுண்டு என்பதை மந்தைவெளிப்பாக்கம் லேடிஸ் கிளப் அன்று நிரூபித்தது!



பொப்பிலி குமார ராணி, குமாரி லக்ஷ்மி



மிஸ் இந்திரா, ஸ்ரீமதி கோபிநாத்

6 - 21-4

# 8. தலைசுற்றல் மயக்கம் (ஈரலால்)

சொத்தைப் பல்லினுள்ளே இருக்கும் நரம்பில் அழற்சி ஏற்பட்டு அது அந் நரம்பின் மூலமாக மூளையிலிருக்கும் ஒரு குறிப்பிட்ட கேந்திர ஸ்தானத்தைத் தாக்கி அதன் காரணமாக அடுத்துள்ள வேறு கேந்திர ஸ்தானங்களும் தாக்குண்டு பொதுவாகவே மூளையில் ஒரு குழப்பம் உண்டாகித் தலை சுற்றல் மயக்கத்தில் முடிய நேரிடுகிறது என்று முந்தைய கட்டுரையில் சொன்னது நினைவிருக்குமே! கண்ணைப் பறிக்கும் வெளிச்சத்தைக் காண்பதாலும் காதைக் கிழிக்கும் சத்தத்தைக் கேட்பதாலும் ஏற்படும் தலை சுற்றலும் இவ்வினத்தைச் சேர்ந்ததாகும். இவைகளைப் பற்றி ஏற்கனவே வேண்டியமட்டும் சொல்லியாயிற்று. ஆகவே அவ்விஷயமாக இனி இங்கு விசேஷமாக எழுதத் தேவையில்லையல்லவா?

மூன்றாவதாகச் சொன்னது அஜீர்ணத்தால் ஏற்படும் ஒருவித தலை சுற்றலும் மயக்கமும். உண்ட ஆகாரம் ஜெரிக்காத காரணத்தால் இந்நிலை ஏற்படும். ஜெரிக்காமல் இருக்கக் காரணம் என்னவாகும்? அதிகமாக அல்லது அமிதமாகச் சாப்பிட்டதால் தான் என்று நியமமில்லை. அகாலத்தில் சாப்பிட்ட ஆகாரம், ஆறிப்போன சோறும் கறியும் சாப்பிட்டாலும், பழக்கமில்லாத உண்டிகளைச் சாப்பிட்டாலும் இப்படி ஜீரணமாகாத நிலை ஏற்படலாம்.

இதில் சோம்பல் அதிகமாக இருக்கும். சிறிது தலைசுற்றலும் மயக்கமும் இருக்கும். தூங்கவேணும் என்று இருக்கும். ஆனால் தூக்கம் வராது. தூக்கம் வராவிட்டாலும் கண்ணை மூடிக்கொண்டே படுத்திருக்க வேண்டுமென்றிருக்கும். பசி இருக்காது. வயிறு நிறைந்திருப்பது போல் ஒரு தோற்றம். அப்போதுதான் சாப்பிட்டு எழுந்ததுபோல் ஏப்பம் இவை இருக்கும். இந்நிலை நீடிக்குமானால் பொரியரிசி ஏப்பம் — வயிற்றில் ஒரு கனம் — ஓயாது கொட்டாவி என்ற லட்சணங்களும் ஏற்படும்.




இதற்கு 'ரஸசேஷம்' என்று சாஸ்திரங்களில் பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகாரம் வேண்டாமென்று நீக்கி, சுகமாக ஓய்வெடுத்துக்கொள்வதுதான் செய்ய வேண்டிய முக்கிய சிகிச்சை. தூக்கம் வந்தால் தேவையானமட்டும் தூங்கலாம். தூங்கி எழுந்த பிறகு சிறிது பசியும் தாகமும்கூட ஏற்படும். அப்படி ஏற்படுமாயின் நொய்யரிசிக் கஞ்சி வைத்துத் தயாரித்து, மேல் தெளிவான திரவாம்சத்தை மட்டும் பருக்கையே இல்லாமல், சிறிது சிறிதாகச் சூட்டோடு குடித்து வருவது நல்லது. குடிப்பதற்கு வெந்நீரையே தான் ஏற்க வேண்டும். அதிலும் சுக்கு, தனியா, சீரகம் இவற்றில் சிறிது சேர்த்துக் காய்ச்சிய வெந்நீரைக் குடிப்பது மிகவும் நல்லது. ஜம்பீராதி பானகம் (இதன் செய்முறை ஏற்கனவே நாட்டு வைத்தியக் கட்டுரையில் விளக்கப்பட்டது) என்ற மருந்தில் தண்ணீர் சேர்க்காமல் ஒரு நயா பைசா அளவில் தினம் 3, 4 தரம் நக்கி வருவது நல்லது. அன்றைய தினம் ஸ்நானம், குளி இவை வேண்டியதில்லை.

மறு நாள் காலையில் இஞ்சியோ, மிளகோ, மிளகாயோ இட்டுக் காய்ச்சிய எண்ணெய் தேய்த்து அதிக நேரம் ஊறாமல் எண்ணெய்க் குளியை முடித்துக் கொண்டு சூடாக ரஸஞ் சோறு மட்டும் உண்டு, பகலில் உறங்காமல் இருக்க வேண்டும். இரவில் கண் விழித்திருத்தலும் கூடாது. அதற்கடுத்த நாள் முதல் சாதாரண நிலை ஏற்படும். வழக்கமான ஆகாராதிகளை ஏற்கத் தொடங்கலாம். நான்காவதாகச் சொன்னது ஈரல் சரிவர வேலை செய்யாததால் விளையும் தலை சுற்றல் மயக்கம்.

ஈரலென்பதை 'லிவர்' என்பர். இதிலிருந்து சுரக்கும் பித்தநீர் ஜீர்ணத்துக்கு மிகவும் அவசியமானது. ஆகாரத்திலுள்ள கொழுப்புச் சத்து ஜெரிப்பதற்கு இந்த லிவரின் சுரப்புதான் துணை புரிகிறது. அவ்வாறே ரத்தம் உண்டாவதற்கும் இதுதான் முக்கிய காரணம். கொழுப்புச் சத்தை அதிகம் சேர்ப்பது அல்லது வகைகெட்ட ஆகாராதிகளைச் சேர்ப்பது என்பது போன்ற காரணங்களால் இது கோளாறு அடைய நேரிடலாம்.

இதனால் சில சமயம் பசி எடுக்காது. சில சமயம் அதிகப் பசி எடுக்கும். சிலருக்குத் தேகமெல்லாம் வெளுத்துப்போய்ச் சரீரத்தில் ஓய்ச்சலும் ஏற்படும். அல்லது கண், நாக்கு, மல மூத்திரங்கள், தேகத்தின் சருமம் முழுதுமே மஞ்சள் நிறமாக மாறிவிடும். பசியுமிராது. தூக்கமும் இராது. தலை சுற்றலும் மயக்கமும் தொடர்ந்து நிற்கும். படுத்தபடியே இருக்கும்போது கூடத் தலை சுற்றல் இருக்கும். இந்நிலையை நீடிக்கவிட்டால் வியாதியின் கடுமை அதிகரித்துக் கொண்டே போகும். பலவீனமும் அதிகமாகிக் கடைசியில் மனிதன் படுத்த படுக்கையாகி விடுவான்.

ஆகவே இந்நிலையை ஆரம்பத்திலேயே நிவர்த்திக்க முனைய வேண்டும். அதற்காக ஈரலின் அடைசலைப் போக்கி, அதிலிருந்து சுரப்பது குணத்திலும் அளவிலும் நன்முறையிலிருக்குமாறு செய்ய வேண்டும். இதற்குத் திராக்ஷை அல்லது திராக்ஷாதி கஷாயத்தால் குடலைச் சுத்தம் செய்து கொள்வது நல்லது; ஆச்சரியமான பலனை அளிக்க வல்லது.



''இன்னும் நூறு வருஷம் கழித்து, 'இதோ, இந்த வீட்டிலேதான் பிரபல எழுத்தாளர் சிவராமன் வாழ்ந்தார்' என்று என்னைப் பற்றி உலகம் சொல்லிச் சொல்லிப் பெருமைப்படும் சார்....!''

''என்னிடம் இப்போதே வீட்டு வாடகையைத் தராவிட்டால் நாளைக்கே உலகம் அப்படிக் கூற ஆரம்பிக்கும்!''

— தனித்த இராமை — காய்ந்த சரக்கு — கடையில் விற்பது. ''பச்சே....ஏ....இராச்சிப் பயே....ஓ......ம்....'' என்று தெருவில் விற்பதல்ல. ''பன்னீரு... இராச்சீப்....பயே ஓ.....ம்....'' என்று விற்கும் கரு நிறமான வாதனம் (இதை நான் சீமை நாவல் பழம் என்றழைப்பது வழக்கம். அதற்குத் தக்க காரணமும் உண்டு) ஒன்று உண்டு. குலை குலையாய் இருப்பதில் மட்டும் திராக்ஷை போல் இருக்கும். அவ்வளவுதான்; இதுவுமல்ல. கடையில் விற்பதில் பெரிய திராக்ஷை என்று விதை உள்ளது ஒன்று. இதை வடமொழியில் 'கோஸ்தனீ திராக்ஷா' என்பர். மற்றொன்று சற்று சிறியது. உள்ளே விதைகள் இல்லாதது. இவ்விரண்டில் எதுவானாலும் பரவாயில்லை. ஏற்றுக் கொள்ளலாம். இந்தத் திராக்ஷையில் ஒரு விசேஷம். கடையிலிருந்து வாங்கினதும் பார்த்தால் இது மிகவும் சுத்தமானதாகத் தோன்றும். தண்ணீரி விட்டுக் கழுவினால்தான் தெரியும் அதிலுள்ள 'சூட்டு'. சாணி கரைத்த ஜலம் போலிருக்கும், திராக்ஷைவிட்ட ஜலத்தை வடிக்கும் போது. பாத்திரத்தின் அடியில் மண்ணும் தங்கி நிற்கும். ''அட ராமா!'' என்பீர்கள். ஆகவே இதை முதலில் கழுவிப் பிறகு காய வைத்துப் பிறகு காய்ந்ததை ஆய்ந்து எடுத்துக்கொள்ள வேண்டும். இதில் ஒரு பலம்... அல்லது சூரத்தாவரை என்னும் கடைச் சரக்கின் (புளியன் இலை போன்றிருக்கும்) இலைகளை ஆய்ந்தெடுத்து ஒரு பலம் ரோஜாப் பூவின் தளங்களை மட்டும் காய வைத்துக் கடையில் விற்பர். இதில் இரண்டு பலம்... மேற்சொன்னவிதம் சுத்தம் செய்த திராக்ஷை 8 பலம். இவற்றையெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்துப் பிசைந்து டப்பியில் வைத்துக் கொண்டு இக் கட்டியிருந்து ஒரு பலம் — எடுத்து ஒரு பாத்திரத்திலிட்டு உலை நீர் போலக் கொதிக்கும் ஜலத்தில் ஓர் ஆழாக்குக்குக் குறையாமல் இராப் பொழுது மூடி வைக்கவும். காலையில் மறுபடியும் சிறிது கொதிப்பித்தோ அல்லது சூடாக்கியோ மருந்துகளைக் கசக்கிப் பிழிந்து களைந்துவிட்டு வடிகட்டிக் குடிக்கவும். ஒரு தரம் நன்றாகக் குடல் கழியும். அல்லது இரண்டு மூன்று முறை தாராளமாகச் சிறு நீர் பிரியும். ''பேதிக்குக் கொடுத்தேனடா திருவாழத்தான், பேதியாகாமல், அது வயிற்றில் சிக்கி வயிறு உப்பிச் சங்கடப்படுத்தி...'' என்பது போன்றதொன்றும் ஏற்படவே செய்யாது. போனால் நல்லது. போகாவிட்டால் கெடுதல் ஏதுமில்லை. மறு நாளும் இதையே கொடுக்கலாம். இதை உபயோகித்து ஈரலின் அடைசலைப் போக்கி, நல்லவிதமான பித்தச் சுரப்பு அளவோடும், குணத்தோடும் கூடியதாய்ச் செய்து கொள்வது அவசியம். இதனால் நல்ல குணமுண்டாகும். பிணி வரக்கூடிய விபரீதங்களை முளையிலேயே கிள்ளி எறிந்த வகையில் வரவொட்டாமல் செய்யும் முயற்சியாகும்.

பிறகு, சுக்கு, திப்பிலி, மிளகு, ஏலரிசி, ஜீரகம் என்னும் ஐந்து சரக்குகளின் சம பாகமான சூரணங்களை ஒன்றாகச் சேர்த்ததில் ஒன்றிரண்டு சிட்டிகை முதல் அரை டீஸ்பூன் அளவு வரையில் தனியாகவோ சிறிது பூரா சர்க்கரையுடன் கலந்தோ கற்கண்டின் சூர்ணத்துடன் கலந்தோ கொஞ்சம் வெந்நீருடன் சாப்பிட்டால் பசிப்பது, ஒருகால் பசிக்காமல் இருப்பது, ஒருகால் அகோரமாய்ப் பசிப்பது என்னும் தான்தோன்றித் தனமான போக்கு நீங்கும்.

நிலவேம்பு என்றொரு கடைச் சரக்கு. சகிக்கமற்ற கசப்புச்சுவையுள்ளது. ஆகவே இதனைக் 'கிராததிக்தம்' என்றழைப்பதுண்டு. இதன் சூரணத்தில் ஒன்றிரண்டு சிட்டிகை அளவையோ அல்லது இதன் கஷாயத்தையோ ஒன்றிரண்டு வேளை வீதம் சில நாட்கள் சாப்பிட்டு வந்தால் ஈரலின் செயல் சம்பந்தமான எல்லாக் கோளாறுகளும் நீங்கி நன்னிலை ஏற்படும்.

இவ்வுபாயங்களால் ஈரலின் கோளாறும் அதனால் ஏற்பட்ட தலை சுற்றல் மயக்கமும் நன்றாக மாறின பிறகு ஓமத்தையோ அல்லது கஸ்தூரி மஞ்சளையோ இட்டுக் காய்ச்சிய எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டும்.

இப்படிச் சிகிச்சை செய்ய வாய்ப்பு ஏற்படாமல் இந்த ஈரலின் கோளாறு முற்றிக் காமாலை அல்லது மஞ்சள் காமாலை என்னும் நிலை வரை வளர்ந்து விட்டாலோ...? ஏற்கனவே நாட்டு வைத்தியக் கட்டுரைத் தொடரின் கீழ் காமாலைக்குச் சொன்ன சிகிச்சைகளைச் செய்ய வேண்டும். தும்பை விட்டு வாலைப் பிடிக்கும் பிரகஸ்பதியாகலாமா?

எந்த நிலையிலிருந்து சிகிச்சை செய்யப்பட்டாலும் ஜீரகத் தைலம் என்று சித்தர் முறையில் தெரிவித்த தைலத்தைத் தலைக்குத் தினசரி முடி சீவிக்கொள்ளவும், எண்ணெய்க் குளிக்கும் உபயோகிப்பதும் சீந்தில் கொடியின் சாரம் கஷாயத்தைக் கற்கண்டும் சேர்த்துக் குடிப்பதும் மிகவும் நல்லது.




# "ரெக்கரிங்"
# டிபாசிட் திட்டம்

## இந்த திட்டத்தில் மிகச்சிறு மாதச்சேமிப்பு மூலம் ஒரே சமயத்தில் பெருந்தொகையை அடையலாம்

குறைந்த பட்சம் ரூ. 5/- லிருந்து அதிகப்பட்சமாக அதன் பெருக்குத் தொகை ரூ. 500/- வரையில், டிபாசிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்,

பிரதி மாதம் டிபாசிட் செய்யும் தொகையான :-

| | | | | |
|---|---|---|---|---|
| | ரூ. 5/- | ரூ. 10/- | ரூ. 50/- | ரூ. 100/- |
| கீழ்க்கண்டபடி பெருகும் : | | | | |
| 34 மாதங்களில் | ரூ. 180/- | ரூ. 360/- | ரூ. 1800/- | ரூ. 3600/- |
| 46 மாதங்களில் | ரூ. 250/- | ரூ. 500/- | ரூ. 2500/- | ரூ. 5000/- |
| 85 மாதங்களில் | ரூ. 500/- | ரூ. 1000/- | ரூ. 5000/- | ரூ. 10,000/- |

முழு விவரங்கள் பாங்கின் எந்தக் கிளைக் காரியாலயங்களிலும் கிடைக்கும்.

தலைமைக் காரியாலயம் :

# தி இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிட்.

151, மவுண்ட் ரோட், சென்னை-2

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

எஸ். ஆர். வி. அரசு
ஜெனரல் மானேஜர்

IOB-12-SA

# கிரக்கம்

ஆர். சூடாமணி

கடல் மீது தொலைவில் நீர் அலைகள் ஆரவாரம் செய்து கொண்டிருந்தன. இன்னொரு கடலாக மணல் மீது இள வெயில் அலைகளின் ஓட்டம். மாலைப் பொழுது இன்னும் மங்கவில்லை. கட லோரம் நிழற் சித்திரமாகப் படகு களின் உருவங்கள். மணலில் வண்ணப் புள்ளிக்கோலங்களாக ஜனங்கள் உட் கார்ந்தும் அசைந்தும் காணப்பட்ட னர். பட்டம் பறக்க விடும் சிறுவர் களின் இரைச்சல். ஐஸ்கிரீம், சோடா, கடலை, முறுக்கு வடை முத லான பணியாரங்கள் இவை விற்கும் வியாபாரிகளின் மும்முரம்; நின்று கொண்டிருக்கும் மோட்டார்களைச் சூழும் "ஐயா, தர்மம் போடுங்க", "அம்மா, குழந்தை முகத்தைப் பார்த்துப் பிச்சை போடுங்க", "ஒரு பைசா குடுத்தால் என்ன சாமி செய் வேன்? காலணான்னுகூட ரெண்டு பைசா ஆவுதே" என்பது போல் மாறுபட்ட கரங்களில் ஓயாத முறை யீடுகள்.

அந்த வடிவங்களிடையே ஒருவன். கருத்த உடல். நரம்போடிய நெருங்க லான கரங்கள். இடது அக்கு ளின் கீழே நீண்டதொரு கட்டை இரண்டாவது காலாக அவனது மெலிந்த



பாரத்தைத் தாங்கிக் கொண்டிருந்தது. அரையில் சிறிய வெள்ளைத் துண்டு. அதற்கு மேலும் கீழும் நீண் டிருந்த வெற்றுடல் கடற் கரையின் பனிக் காற்றைத் தாங்கித் தாங்கி மரத்து விட்டது போல் அலட்சிய மாய் நின்றது.

சுற்று முற்றும் பார்த்த அவனுடைய கண்கள் மலர்ந் தன. கடற்கரையின் உள்ளே அமைந்திருந்த புல் பரப்புகள், பாதைகள் இவற்றுக்கு இடையில் மோட்டார்கள் வரிசையாய் நின்று கொண்டிருந்தன. சில வற்றில் மனிதர்கள் இல்லை. சிலவற்றில் வண்டிக் கதவைத் திறந்து வைத்துக் காற்று வாங்கியவாறே இருவர் மூவராகப் பேசிக் கொண்டிருந்தனர். மணலையொட்டிய கடற் கரையின் உள்பாதையின் ஓரமாக இன்னொரு மோட்டார்களின் வரிசை. வானவில்லின் நிறங்களைவிட அதிக நிற வேற்றுமைகள்; பெட்டி போன்ற பழைய மாடல்களிலிருந்து இருபுறமும் இறக்கையை நீட்டிக் கவிழ்ந்திருக் கும் சொகுசான பறவைகளைப் போன்ற பிரம்மாண்டமான புது வகைகள் வரையில் எல்லாவிதமான அமைப்பிலும் அளவிலும் கார்கள் நின்றன. ஒரு 'பியூக்'கின் பக்கத்தில் மணலின் மேல் நாற்காலி போட்டு ஒரு பெரியவர் அமர்ந்து காற்று வாங் கும் கடமையில் ஈடுபட்டிருந்தார்; அதன் டிரைவர் அவர் கண்ணுக்குத் தெரியாமல் வண்டி 'பானட்' மறைப் பில் குந்திட்டு உட்கார்ந்து சிகரெட் ஊதிக் கொண்டிருந்தான்.

அந்த 'பியூக்'குக்கு அடுத்தபடி இன்னொரு கார் நின்றிருந்தது. காரா, கண்ணாடிப் பெட்டியா என்று சந்தே கிக்கச் செய்யும் ஒளி நிறைந்த புது மாடல் 'ஸ்டாண்டர்ட் ஹெரால்ட்'. சிவப்பு நிறம். அதில் சாரதியின் ஆச னத்தில் ஒருவனும் பக்கத்தில் இன் னொருவனுமாக இரு இளைஞர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அந்த வண்டி யைக் கண்டுதான் நொண்டிப் பிச்சைக் காரனின் கண்கள் மலர்ந்திருந்தன. அதை நெருங்கி வரலானான்:

"டே, பாஸ்கர், அதோ உன் 'பிரெண்ட்' வந்துட்டான்!" என்று சிரித்துக் கொண்டே சொன்னான், சாரதி இடத்தில் இருந்தவன்.

பக்கத்தில் அமர்ந்திருந்த பாஸ்கர் சட்டென்று கவனித்து விட்டுத் தன் சட்டைப் பையிலிருந்து பர்சை எடுத்துத் திறந்தான். ஐந்து பைசா நாணயத்தை எடுத்துத் தயாராக வைத்துக் கொண்டான்.

மண் பாதையின் மேல் ஒற்றைக் கட்டை எழுப்பிய குத்துச் சத்தம் நெருங்கி வந்தது. 'ஹெரால்டின்' கதவோரம் வந்து நின்றது.

பாஸ்கரின் கண்கள் பிச்சைக்காரனின் உருவத்தின் மீது படிந்தன. ஆழமான அந்தப் பார்வையில் ஏதேதோ பேச்சுக்கள் தெளிவது போல் இருந்தது. இள முகத்தில் உணர்ச்சியால் பொங்கிய செம்மையில் காதுத் தண்டுகள் சூரியஒளி பட்டுச் செங்கதிர் வீசின. கன்னத்தில் இடிக்கும் நீண்ட சட்டைக் காலர்கள். குளிரை அதிகம் உணரும் சுபாவம் போல் இருக்கிறது அவருக்கு என்று பிச்சைக்காரன் நினைத்துக் கொள்வான். அதே காரணத்தால்தானோ என்னமோ, அந்த மோட்டார் ஐயா இடுப்புக்குக் கீழேயும் உடம்பை மறைத்து ஒரு கம்பளிச் சால்வையைப் போர்த்தியிருந்தார்.

இந்தக் காட்சி அவனுக்குப் புதிதல்ல. ஆறு மாத காலமாக அநேகமாக ஒரு நாள் கூடத் தவறாமல் அந்த ஹெரால்ட் அங்கு வந்து கொண்டிருந்தது. பிச்சைக்காரனும் வந்து கொண்டிருந்தான்.

வண்டி அருகில் வந்து நின்ற பிச்சைக்காரன் ஒரு சலாம் போட்டான். பாஸ்கரின் கை வெளியே நீண்டு ஐந்து பைசாவை அவனது தகரக் குவளையில் வைத்தது. தொடர்ந்து இன்னொரு சலாம். பிச்சைக்காரன் மேலே சென்று விட்டான்.

இது ஓர் அன்றாட நிகழ்ச்சி.

முதலிலெல்லாம் அம் மனிதன் "சாமி! ஒரு பைசா போடுங்க. காலில்லாதவனுங்க நான். தர்ம துரையே!" என்றுதான் சொல்லிக்கொண்டிருந்தான்.

அவ்வுருவத்தின் மேல் முதல் முதலாகப் பாஸ்கரின் பார்வை படிந்தபோது அவன் உடல் எப்படித் துடித்துவிட்டது! திடீரென்று பொடித்த வியர்வையைப் பதறும் கையால் துடைத்துக் கொண்டே "சம்பத், அங்கே.... அங்கே பாருடா, பாவம்" என்று சாரதியான நண்பனின் கவனத்தைத் திருப்பினான்.

அருகில் வந்து, "காலில்லாதவனுங்க நான்!" என்று கெஞ்சி நின்றவனின் முன் அவன் கண்கள் சிறிது நேரம் வேதனையோடு குத்திட்டு நின்றன.

இரண்டு நிமிஷங்கள் காத்திருந்த பிச்சைக்காரன் அவன் பிச்சையிடப் போவதில்லை என்று கருதித் தலைகுனிந்தவாறு மேலே செல்லலானான்.

பாஸ்கருக்கு அப்போதுதான் விழிப்பு வந்தது. "ஏ...ஏ... இந்தாப்பா, இரு" என்று கூவியவாறே பர்ஸிலிருந்து ஐந்து பைசாவை எடுத்துக் குவளையில் போட்டான். அந்த முதல் சந்திப்பிலேயே மோட்டார் ஐயாவுக்குக் குளிர் அதிகம் என்று பிச்சைக்காரன் தெரிந்துகொண்டு விட்டான். ஏனென்றால் காசைப் போட்ட கை நடுநடுங்கிக் கொண்டிருந்தது.

அவன் மேலே சென்றான். பாஸ்கரின் கண்கள் அந்த ஒற்றைக் காலையே நெடுந்தூரம் தொடர்ந்து சென்றன. இதயம் படபடத்தவாறிருந்தது.

நண்பனின் விரல்கள் இலேசாய் அவன் தோளைத் தொட்டன. "பாஸ்கர்!" என்ற அவன் குரலில் பரிவு நிரம்பிப் பொங்கியது.

வறண்டிருந்த உதடுகளை நாவினால் ஈரமாக்கிக் கொண்டே பாஸ்கர் சிரிக்க முயன்றான்.

"ஆனாலும் பிச்சைக்காரர்களின் தொல்லை ஜாஸ்தியாயிடுத்து. இல்லே சம்பத்?" என்று ஏதோ பேசி வைத்தான் இதயத்தை மறைக்க.

அடுத்த நாள் மறுபடியும் இருவரும் கடற்கரைக்கு வந்தார்கள். அதே இடத்தில் வண்டி நின்றது. பாஸ்கரின் விழிகள் சுற்று முற்றும் தேடி அலைந்தன. நண்பன் பேசிக் கொண்டிருந்ததெல்லாம் பொருளற்ற இரைச்சலாகத் தொலைவில் ஒலித்தது.

'டொக்...டொக்... டொக்...' மண்ணில் குத்துச் சப்தம். காரின் பக்கத்தில்.....ஆம், அந்த நொண்டி வடிவம்தான்.

"ஐயா! தர்மம் போடுங்க..."

கை தானாகவே காசை எடுத்து நீட்டியது.

சில தினங்களில் இந்த நாடகம் இருவருக்குமே பழகிவிட்டது. அந்த வண்டி அங்கு தான் நிற்கும் என்று அந்த மனிதனுக்குத் தெரியும். அவன் வருவான் என்று பாஸ்கருக்கு உறுதி. கொஞ்ச காலத்தில் பேச்சுக்குக்கூட அவசியம் இல்லாமல் போய்விட்டது. அவன் வந்து நிற்பான். பாஸ்கர் நிமிர்ந்து பார்ப்பான். இருவர் பார்வைகளும் சந்திக்கும். அந்த ஐயாவின் பார்வையில் தன்னைப் புரிந்துகொண்ட ஒரு தனி அனுதாப உணர்ச்சி இருப்பதாகப் பிச்சைக்காரனுக்குத் தோன்றியது.

இருவரும் பேசிக்கொள்வது கிடையாது. மௌனம்தான் பேசியது. அழுத்தமான துடிப்பு ஒன்று பாஸ்கரின் முகத்தை ஊடுருவிச் செல்லும். அவன் காசை எடுத்துப் போடுவான். மற்றவன் சென்று விடுவான்.

ஆறு மாதங்களாக நிகழ்ந்து வரும் நிகழ்ச்சி தான் இது.

"பாஸ்கர்! மழையோ பனியோ, வெய்யிலோ தினம் அந்தப் பிச்சைக்காரனுக்கு ஐந்து பைசா வரும்படி நிச்சயம். உன் மாதாந்திரச் செலவில் இதை ஓர் 'அயிட்ட'மாக எழுதி வைத்துவிடு" என்பான் சம்பத் சிரித்துக் கொண்டே.

ஒரு நாள் கடுமையான மழை. அன்று வராமல் அடுத்த நாள்தான் ஹெரால்ட் கடற்கரைக்கு வந்தது.

"ஏன்டா சம்பத் இன்னும் அந்த ஆளைக் காணோம்? நேத்து நாம் வரல்லேயே, இன்னிக்கு வரமாட்டோம்னு போயிருப்பானோ?"

"அவன் ஏன்டா போறான்? இப்படித் தினம் தர்மம் செய்கிற வள்ளல்கள் அவனுக்கு எத்தனை பேர்கள் கிடைப்பார்கள்? எல்லாம் வருவான் பார்."

அவன் பேசி முடிக்குமுன் அருகில் அந்தச் சத்தம். முந்தைய நாள் மழையினால் கல் பெயர்ந்து சகதி படிந்த பாதையிலே அந்த ஒற்றைக் கால் அழுந்தப் புண் ஆகும் காட்சியைப் பார்க்க இயலாமல் பாஸ்கர் பர்சைத் திறக்கும் வியாஜத்தில் தலையைக் குனிந்து கொண்டான்.

# நாள் முழுவதும் புத்துணர்ச்சி







## சந்தன சோப்

ஆக்டமர்
லாரெஞலின்
அதிகப்படியான கிளிசரின்
சேர்க்கப்பட்டது.

திஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்,
சென்னை-1.

OK பரிசுக்
கூப்பன்களை
சேகரியுங்கள்

EP-EAC-8

கதவருகில் உருவம் நின்றது.

மறுபடியும் இருவரிடையே அந்த மௌனம். சந்தித்த பார்வைகளில் இனம் தெரியாத பரிச்சயம். பாஸ்கரின் கை உயர்ந்தது. இம் முறை அதில் பத்துப் பைசாக் காசு, முந்திய தினத்துக்கு ஈடு செய்வது போல்.

சலாம் போட்டுவிட்டு நொண்டி மேலே சென்றான். காற்றில் குளிர் உறைத்துக் கரிய உடல் நடுங்கியது. அந்த ஐயாவைப் போல் கம்பளி போர்த்துக்கொண்டு உட்கார்ந்திருக்க இயலுமா தன்னால்? ஒருநாள் கூட அவர் வண்டியை விட்டுக் கீழே இறங்கி வருவதில்லை. அத்தனை குளிர் அவருக்கு. அந்தக் குளிர் பெரிய மனிதர்களுக்குக் கட்டுப்படியாகும். பிச்சைக்காரர்களுக்குக் கட்டுப்படியாகுமா?

பருவங்கள் மாறிக் கொண்டிருந்தன. மழைக்குப் பின் பனி. அதன் பிறகு வெயில். இந்த நாடகம் மட்டும் மாறுதலின்றி நடந்து கொண்டு வந்தது.

"என்ன பாஸ்கர், எங்கே வந்தே இப்படி? சௌக்கியமா?"

அவனுக்குப் பரிச்சயமான தூரத்து உறவினர். ஒருவர் இன்னொரு நண்பருடன் வண்டியை நோக்கி வந்து கொண்டிருந்தார்.

"சௌக்கியம்தான் ஸார்! இவனைத் தெரியுமா? என் சிநேகிதன் சம்பத்."

"பார்த்திருக்கிறேன். வணக்கம்."

"வணக்கம்."

"இவர் என்னுடைய நண்பர் சங்கரன். விஞ்ஞான புரொபஸர். இவர் சகோதரி ராஜமும் பெரிய சமூக சேவகி. இவர் அண்ணு பசுபதி பெரிய டாக்டர். ரொம்பவும் உயர்வான குடும்பம்" என்று உறவினர் தம் நண்பரை அறிமுகம் செய்து வைத்தார்.

சம்பத் கீழே இறங்கி நின்று அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தான். சால்வையின் ஓரத்தை நெருடியபடி தன் இடத்திலேயே உட்கார்ந்திருந்தான் பாஸ்கர்.

"உன்னைக் கடற்கரையில் பார்ப்பேனென்று நான் நினைக்கவே இல்லேடா பாஸ்கர்."

"இப்போ கொஞ்ச காலமாத்தான் வரேன் ஸார். சம்பத் ஆபீஸிலே 'லோன்' ஏற்பாடு செய்து கார் வாங்கியிருக்கான். அதிலிருந்து எனக்குத் தினம் 'டிரைவ்' கிடைக்கிறது!"

"நல்லதுதான். அப்படித்தான் இருக்கணும் நீ. கடற் காற்று முதலில் உடம்புக்கே நல்லது."

"தினம் வந்து இந்த இடத்தில் காற்று வாங்கிட்டுப் போறோம். பாஸ்கர் ரொம்பவும் அனுபவிக்கிறான்" என்றான் சம்பத்.

"இதே இடத்துக்குத்தானா? அந்தக் கோடியிலே காந்திஜி சிலைப் பக்கமாய் இன்னும் கலகலன்னு இருக்குமே."

"எனக்கு என்னமோ இந்த இடம்தான் பிடிச்சிருக்கு" என்ற பாஸ்கரின் சிந்தனையில் அந்த ஒற்றைக் காலின் உருவம் நிழலாடியது.

"சரியப்பா. அப்போ நான் வரட்டுமா?"

"அவசரமா ஸார்?"

"கொஞ்சம் வேலை இருக்கு வீட்டிலே."

"அப்போ சரி."

"வணக்கம் ஸார்."

"வணக்கம். பாஸ்கர், உன்னை இங்கே சந்திச்சதிலே எனக்கு ரொம்ப சந்தோஷம்டா!"



உபாத்தியாயர்: ராமு! நீ ஒருவனே இத்தனை தப்புப் பண்ணினாலும்..... எப்படித்தான் உருப்படப் போறியோ புரியலியே!

ராமு: நான் ஒருத்தனும் பண்ணலெ சார், எங்க அப்பாவும் சேர்ந்துதான் சார், பண்ணினார்!

அவர்கள் சென்று விட்டார்கள். சம்பத் மறுபடியும் பாஸ்கரின் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டான். இருவர் கண்களும் செல்பவர்களையே பார்த்துக்கொண்டிருந்தன.

"பாஸ்கர், அந்தப் புரொபஸர் முகத்தில் எத்தனை அறிவுக் களை பார்த்தாயா?"

"அவர் நடை ரொம்பக் கம்பீரமாக இருக்கு" என்றான் பாஸ்கர்.

சட்டென்று அவனைத் திரும்பிப் பார்த்த சம்பத்தின் முகத்தில் கனிவு தேங்கியது. "வீட்டுக்குப் போகலாமா?" என்று கேட்டான் மெதுவாக.

"இரு. அவன்.... அவன் என்னமோ இன்னிக்கு இன்னும் வரல்லியே. ஒருவேளை உடம்புக்கு ஏதாவது இருக்குமோ பாவம்?"

ஆழமான உணர்ச்சியில் புதைந்து பாஸ்கரின் கண்கள் அங்கும் இங்கும் அலைந்தன. சட்டென்று அவற்றில் ஒரு திருப்தி. கட்டையின் ஒலியோடு அந்த உருவமும் நெருங்கி வந்து நின்றது.

பேச்சின்றி ஐந்து பைசாக் கொடை.

மௌனத்தில் ஒரு சலாம்.

"ம், போகலாம் சம்பத். வண்டியைக் கிளப்பு. என்னமோ களைப்பா யிருக்கு எனக்கு."

வேகத்தில் இரைந்து விரைந்து மறைந்தது வண்டி. பிச்சைக்காரன் அதன் போக்கைப் பார்த்துவிட்டு மேலே நடந்தான்.. "மோட்டார் ஐயா புண்ணியாத்மா. தர்மப் பிரபு. தினம் தனக்குக் காசு போடத் தவறுவதில்லை. இத்தகைய இரக்கம் உலகில் இல்லையென்றால் தன்னைப் போன்றவர்களின் கதி என்ன ஆகும்?

அதற்கு அடுத்த சில தினங்களில் அந்த ஐயாவிடம் ஒரு விசித்திர அமைதியின்மை விளைந்ததைப் பிச்சைக்காரன் கவனிக்கத் தவறவில்லை. தர்மம் வழக்கம் போல் நடந்தது. பாஸ்கரின் கையில் நடுக்கம் சற்று அதிகப் பட்டிருந்தது. பிச்சைக்காரனைப் பார்த்த ஆழ்ந்த விழிகளில் அனுதாபத்தின் கொந்தளிப்போடு ஏதோ பிறிதொரு வேதனையின் தவிப்பும் கலந்து கொண்டது. அடிக்கடி கைகளை ஒன்றோடொன்று பற்றிக்கொண்டான். எச்சிலை விழுங்கினான். உதடுகளைப் பதற்றமாய்க் கடித்துக் கொண்டான். இதயத்தில் பொறுக்க முடியாத படபடப்பு. ஈரத்தில் கிளம்புவது போல் அனல் மூச்சுத் தெறித்தது. கைகளில் வியர்வை. வெய்யில்

காலம்தான் வந்துவிட்டதே. வியர்வை கொட்டும்போதுகூடவா சால்வையை எடுத்து விட்டெறியக் கூடாது? பிச்சைக்காரன் வியந்துகொண்டே செல்வான்.

"பாஸ்கர்! இதோ பார். இப்படிப் பதற்றப்படக் கூடாது. நீ என்ன சின்னக் குழந்தையா? எதையும் அமைதியாய் எதிர்கொள்ள வேண்டிய வயசாகவில்லையா?"

தவிப்பு மிகுந்த விழிகளால் பாஸ்கர் நண்பனை ஏறிட்டு நோக்கினான். "சம்பத்...! சம்பத்.....உனக்குத் தெரியாது.... இது எப்படிப்பட்ட சந்தர்ப்பம்! அமைதியாய் எப்படி இருப்பேன்....என்னைப்போல் இருந்தால் தான் இது புரியும்..."

"எனக்கும் புரிகிறதுடா பாஸ்கர்! இந்த 'டென்ஷனி'லேயே உனக்கு ஏதாவது ஆகி விடக்கூடாதேன்னுதான் சொல்கிறேன்."

பாஸ்கர் பேசவில்லை.

அதன் பிறகு ஒரு மாதம் வரை அந்த வண்டி கடற்கரைக்கு வரவில்லை. தினமும் பிச்சைக்காரன் அந்த இடத்துக்கு வந்து நிற்பான். ஏமாற்றத்துடன் திரும்பிச் செல்வான். எத்தனையோ கூட்டம் கடற்கரையில் வந்து மண்டியது. கோடை நாட்களல்லவா? ஈகையும் அனுதாபமும் அவரவர்கள் மனசையும் அவன் அதிர்ஷ்டத்தையும் பொறுத்திருந்தன. நிச்சயமாகப் பிச்சை என்று அந்த மோட்டார் ஐயாவை நம்பிய மாதிரி வேறு யாரையும் நம்ப முடியவில்லை. என்ன ஆகியிருக்கும் அந்தத் தர்மப்பிரபுவுக்கு?

ஏங்கிக்கொண்டே இருந்த மன நிலையில் அந்த வண்டியைப் பார்த்ததும் ஒரு நிமிஷம் ஒன்றும் புரியவில்லை. சிவப்பு வண்டி! ஆமா, அதேதான்! வண்டியை ஓட்டிக் கொண்டு அந்த இன்னொருவர்; பக்கத்தில் இரக்கம் தோய்ந்த கொடையாளி ஐயா. ஒரு மாதத்துக்கு மேலே ஆகிவிட்டது. இன்று இதோ மறுபடியும் வந்துவிட்டார்கள்.

கட்டையை இடுக்கிக் கொண்டு ஒற்றைக் காலில் காட்டக்கூடிய ஆர்வத்தை யெல்லாம் சேர்த்துக் கொண்டு அவன் முன்னேறிய போது 'டொக், டொக்' சப்தம் வழக்கத்தை விட வேகமாய் ஒலித்து நெருங்கி வந்தது.

என்ன ஆச்சரியம்! இவ்வளவு காலமும் இல்லாமல் அந்த ஐயா கால்கள் மேல் சால்வையின்றி வந்திருக்கிறாரே! குளிர் போய் விட்டதா? அவர் முகத்தில்தான் இப்போது என்ன பிரகாசம்?

பாஸ்கரின் இடது கை வண்டிக் கதவின் பிடியைப் பற்றித் திறந்தது. பிறகு மெதுவாக ஒரு காலை நீட்டிக் கீழே மண்ணில் பதித்தான். இன்னொரு கால் ஜாக்கிரதையாய்ப் பின்தொடர்ந்தது. ஒரு கணம் அப்படியே இருந்து விட்டு மெள்ள உடலை உயர்த்தி அவன் கீழே இறங்கி நின்றான்.

அடேயப்பா! இவ்வளவு நாட்கள் இல்லாமல் ஐயா இறங்கிவிட்டாரே! வண்டியிலேயே உட்கார்ந்து உட்கார்ந்து அலுத்துவிட்டது போலிருக்கிறது. பிச்சைக்காரன் கட்டையை எட்டிப் போட்டு இன்னும் அருகில் வந்தான். ஒரு சலாம் போட்டுவிட்டுத் தன் வழக்கமான ஐந்து பைசாவுக்காகக் காத்து நின்றான்.

பாஸ்கரின் கண்கள் அற்புதமாய்ப் பொலிந்து கொண்டிருந்தன. நிஜாரின் வழியே நீண்டு தரையில் உறுதியாக நிலை நின்ற தன் கால்களைக் குனிந்து பார்த்துக் கொண்டான், புதுப் பொக்கிஷத்தை அழகு பார்க்கும் குழந்தையின் பெருமிதத்தோடு. பிறகு இரண்டடி எடுத்து வைத்து நடந்தான். உணர்ச்சி மிகுதியில் இன்பப் பெருமூச்சு பொங்கிக் கொண்டு வந்தது. அவன் உடலெல்லாம் சிலிர்த்தது.

"ஏ சம்பத்! டாக்டர் பசுபதி... ரொம்பக் கெட்டிக்கார சர்ஜன்டா!"

பிச்சைக்காரன் இன்னும் காத்திருந்தான். ஐயா தன்னைப் பார்க்கவில்லையோ? "சாமி, தர்மம் சாமி...."

எத்தனை நாட்களுக்குப் பின் மீண்டும் அப்படிக் குரல் கொடுக்க வேண்டியிருந்தது! பழைய மௌன நெருக்கம் எங்கே?

பாஸ்கருக்கு அந்தக் குரல் காதில் விழவில்லையோ?

"வா சம்பத்! கொஞ்ச தூரம் உன்னோடு நடந்துவிட்டு வரலாம்."

மோட்டார் ஐயாவின் நடையில்தான் எத்தனை துள்ளல்! அடிக்கடி குனிந்து தம் பாதங்களைப் பார்த்துச் சிரித்துக் கொள்கிறாரே? ஐயையோ, அவனைத் தாண்டி வல்லவா சென்று கொண்டிருக்கிறார், கவனிக்கவில்லையா?

"சாமி, காலில்லாதவனுங்க நான்..."

பாஸ்கரின் பார்வையில் இப்போது அவனை அறிந்துகொண்ட அடையாளமே இல்லை.



## ஒன்று ▪ இரண்டு ▪ மூன்று ▪ இதோ தயார் !

## ஆம், செய்ய அத்தனை எளிதானது. இலேசான, சுவைமிக்க

# ரெக்ஸ் ஜெல்லி

ரெக்ஸ் ஜெல்லியிலுள்ள பழச் சுவையும், வாசனையும் உங்கள் குடும்பத்திலுள்ளோர் அனைவர்க்குமே



பிரியமானது. அவர்களுக்காக ரெக்ஸ் ஜெல்லி செய்ய நீங்கள் விரும்புவது சகஜமே ... காரணம், அது சத்துச் செறிந்தது. வளரும் குழந்தைகளுக்குச் சிறந்தது. சின்னஞ்சிறு சிசுக்களும், வியாதியிலிருந்து தேறிவருபவர்களும்கூட ஜீரணித்துக் கொள்ளக்கூடியது.

கீழ்க்காணும் 6 வித சேர்த்தியான சுவைகளில் ஒன்றைக்கொண்டு ரெக்ஸ் ஜெல்லி தயாரிக்கலாம்: ராஸ்ப்பெர்ரி, ஸ்ட்ரா பெர்ரி, பைனாப்பிள், ஆரஞ்சு, லெமன், செர்ரி.

நீங்கள் பின்பற்ற மூன்று வழி எளிய தயாரிப்பு முறை:

1 ரெக்ஸ் ஜெல்லி படிகமணிகளை வெந்நீரில் கரைக்கவும்.

2 பிறகு, போதுமான அளவு குளிர்ந்த ஜலத்தை அத்துடன் சேர்த்து, ஒரு பைண்ட் (20 அவுன்ஸ்) அளவு கலவையாகச் செய்யவும்.

3 அதை அச்சில் ஊற்றி பனிக்கட்டி மேல் ஜெல்லியை உறைய வையுங்கள்.



அடிக்கடி பரிமாறக்கூடிய அருமையான பொருள் ரெக்ஸ் ஜெல்லி.

**கார்ன் பிராடக்ட்ஸ் கோ.(இந்தியா) பிரைவேட் லிட்.**

CPY-12-TAM

அன்று 'டியூட்டி'க்கு வந்தது முதலே பழனி உற்சாகமாக இல்லை. வேலை எவ்வளவு கடுமையாக இருந்தாலும் அஞ்சாமல் உழைப்பவன் அவன். மற்ற 'காரேஜ் ஸ்வீப்பர்'களைப் போல், 'பிட் லைனி'ல் வந்து நிற்கும் தொடர் வண்டிப் பெட்டிகளை ஏனோ தானோ என்று சுத்தம் செய்ய மாட்டான். தன் வீட்டுக் கூடத்தை — மன்னிக்கவும், கூடமும் தாழ்வாரமும் பெரிய அறைகளும் உள்ள வீட்டில் அவனைக் குடியிருக்கச் செய்து, நல்ல பெயர் சம்பாதித்துக் கொள்ளும் பேற்றைக் கடவுள் பெறவில்லைதான்! — எப்படிக் கவனமாகக் கூட்டி, தூசி தும்பு இல்லாமல் வைத்துக் கொள்ள விரும்புவானோ, அப்படியே அந்தப் பிரயாணப் பெட்டிகளையும் வைத்துக் கொள்வான். அவனுடைய உழைப்பிலும் நேர்மையிலும் அவனுக்கு அதிகாரியான 'டிரெயின் எக்ஸாமினர்'ருக்கு அசைக்கமுடியாத நம்பிக்கை.

என்ன சொன்னேன்? 'உழைப்பிலும் நேர்மையிலும்' என்று? ஆமாம்! அவனுடைய அலுவலில் அப்பழுக்குக் கண்டுபிடிக்க முடியாததைப் போலவே, அவன் நடத்தையிலும் தவறு காண முடியாது.

பழனி ஒரு தொடர்வண்டியிலுள்ள அத்தனை பெட்டிகளையும் சுத்தம் செய்து விட்டு, 'சார், இந்த ரேக் ரெடி' என்று சொல்லி விட்டால், அவனுடைய அதிகாரி நிம்மதியாகப் பெருமூச்சு விடுவார். அந்தப் பெட்டிகளில் பிரயாணம் செய்யும் பிரயாணிகளிடமிருந்து புகார்க் கடிதம் ஏதும் வராது என்ற நிம்மதி. அத்தனை தடவை புகார்க் கடிதங்களுக்கு அவர் சமாதானம் கூற நேர்ந்திருக்கிறது! 'இந்த எண்ணுள்ள பெட்டியில் பிரயாணம் செய்தேன். பெட்டியின் தரைப் பாகம் குப்பை, கூளமில்லாமல் இருந்தது என்னவோ உண்மைதான். ஆனால் அவற்றை வெளியே கொட்டாமல் மிக்க கவனத்துடன் பெஞ்சுகளின் மேலே பரப்பி வைத்துப் பிரயாணம் செய்பவர்களின் வேட்டி, சட்டைகளை ஏன் அழுக்காக்க வேண்டும் என்பதுதான் எனக்குப் புரியவில்லை!' என்று ஒரு பிரயாணி எழுதிய நையாண்டிப் புகாருக்குச் சமாதானம் கூற வேண்டிய நிர்ப்பந்தம் சென்ற வாரம் கூட நேர்ந்தது! பழனி குறிப்பிட்ட நாளில் அலுவலில் இருந்திருக்க மாட்டான் என்பதை அவன் உழைப்பை அறிந்த எவரும் தீர்மானம் செய்துவிட முடியும்.

நீல அரை நிஜாரும் அரைக் கைச் சட்டையும் அணிந்து கொண்டு, ஒரு கையில் வாருகோலுடனும் மற்றொன்றில், பினைலில், நீண்ட பிரஷ் முதலிய சாமான்கள் அடங்கிய கைப்பிடியுள்ள தகரப் பெட்டியுடனும், பெட்டி பெட்டியாய் ஏறி, சீழ்க்கை ஒலியால் பாடிய வண்ணமே வேலை செய்யும் அவனைக் கண்டு மற்றத் தொழிலாளர்கள் பொறாமைப் படுவார்கள். 'இந்தப் பய மவன் மட்டும் எப்போதும் எப்படிச் சிரிச்சுக்கிட்டே இருக்கான்? மூணு குழந்தை, பொஞ்சாதி. இவன். ஐந்தாம் தேதி கையெழுத்துப் போடும் 'சம்பளப் பட்டியல், அவன் பெயருக்கு எதிரே ஐம்பத்து ஏழு ரூபாய், எண்பத்து நாலு காசு தானே, காண்பிக்கிறது? — எப்படிக் குடித்தனம் பண்ணுகிறான்?



அடுத்த வருஷம் ஓய்வு பெறப்போகும் கொமாரசாமி—குமாரசாமி என்று சொல்லுவதை அவனே ஆட்சேபிப்பான்!— அவனைப் பார்த்துச் சொல்வான்: ''ஏய், பழனி! என் மூப்பத்தஞ்சு வருஷ சர்வீஸிலே உம்மாதிரி ஆளை இப்பத்தாண்டா, பார்க்கிறேன்!....'' அவனுக்குப் பதில் கிடைக்கும் புன்னகையாக.

பழனி மற்றத் தொழிலாளர்களின் கசப்பையும் வெறுப்பையும் ஏகமாகச் சம்பாதித்துச் சேர்த்திருந்தான். காரணம் — அவனுடைய நேர்மை.



# தலைக்கு மேல்..

டி.எஸ்.கே

பிரயாணம் செய்யும் பெட்டிகளில் சில சாமான்களை மறதியாக வைத்து விட்டுச் செல்வது சாதாரண சம்பவம். பெட்டிகளின் அடிப்பாகத்தைப் பழுது பார்க்கவும், சுத்தம் செய்யவும் காலிப் பெட்டிகள் பிட்—லைனுக்கு வரும். புத்தம் புதிய செருப்பு, குடை, கைத்தடி, சிறிய மூட்டை, புத்தகம் — இப்படி ஏதாவது அவைகளைச் சுத்தம் செய்யப் போகும் 'ஸ்வீப்பர்'களின் கண்களில் படும்.

கண்களில் படும் பொருளைத் தன் அதிகாரியிடம் ஒப்படைத்து விடுவான் பழனி!

விலையுயர்ந்த பொருள்களை மட்டும்தான் ஒப்படைப்பான் என்பதில்லை. மறந்து போய் வைத்து விட்டுப் போனவர்கள்கூட லட்சியப்

படுத்தாத பொருள்களையும் அதிகாரியிடம் ஒப்படைத்து விடுவான். ஒரு தடவை —

அப்போது ஜான்சன் என்ற சட்டைக்காரர் டிரெயின் எக்ஸாமினராக இருந்தார்.

'குட்மார்னிங் சார்...'' அவர் எதிரே வந்து நின்றான் பழனி.

''என்னுமேன், பலனி! டியூடியா?'' என்றார் அவர்.

''ஆமாம், சார். மூணாவது வேலிலே நிற்கிற ரேக்கிலே இந்தச் செருப்பு கிடந்துதுங்க....''

ஜான்சன் செருப்புக்களைப் பார்த்தார். என்ன தோன்றிற்றோ? அறையிலிருந்து வெளியிலே வந்தார். திருவேங்கடம் போய்க் கொண்டிருந்தான்.

''திருவேங்கடம்....''

பழனி கீழே வைத்திருந்த செருப்புக்களை ஜாடையில் காட்டி விட்டுப் பெரிதாகச் சிரித்தார். ''யாரோ பாஸஞ்சர் விட்டுட்டுப் போயிட்டாரும்! பொறுக்கிக் கொணர்ந்து கொடுக்கிறான்.....!''

திருவேங்கடமும் சிரித்தான். ''அறுதல், பழைய செருப்பு. தூக்கி எறிஞ்சுட்டுப் போவியா....?''

''விட்டு விட்டுப் போனவர் தேடிக்கிட்டுத் திரும்பி வந்தால்?....''

''வரமாட்டான்....'' அவர் சொல்லி வாயை மூடவில்லை. ''ஐயா!'' என்ற அழைப்பு கேட்டது.





''என் செருப்பைக் காராஜிலேயே விட்டுப்பிட்டேன். இங்கே விசாரிக்கப் பார்க்கச் சொல்லி டேசன்லே அனுப்பிச்சாங்க....''

இரண்டு நிமிஷ சம்பாஷணைக்குப் பின், - அந்த அறுதல், பழைய செருப்பைக் காலில் மாட்டிக் கொண்டு சென்ற கிராமவாசியின் கண்கள் நன்றியால் மலர்ந்திருந்தன.

இப்படி ஒன்று, இரண்டா?

* * *

பழனி உற்சாகமில்லாமல் வேலை செய்வதை முதலில் கவனித்தது, குமாரசாமிதான். கதவுகள் சாத்தியிருந்த பெட்டிக்குள்ளிருந்து, வாருகோலால் பெருக்கும் சத்தம் மட்டும் கேட்டது. சீழ்க்கை ஒலியைக் காணோம்.

''தம்பிப் பயலே! என்னடா, உனக்கு? மொகம் ஒரு மாதிரியா இருக்கு?''

''ஒண்ணுமில்லே அண்ணே!''

''என்ன — 'ஒண்ணுமில்லே'? காலங் கார்த்தாலே எழுந்ததும் உன் மகன் முதுகைப் பதம் பார்த்தது எனக்குத் தெரியாதுன்னு நினைச்சிட்டியா?....'' கண்ணைச் சிமிட்டினான் குமாரசாமி.

மனம் கழன்றது பம்பரமாய்.

பம்பரம்!.....

ஆமாம். அதுதான் காரணம். அண்டை அயலில் உள்ள பிள்ளைகள் எல்லாரும் பம்பரம் வைத்திருக்கிறார்களாம். 'எனக்கும் ஒண்ணு வாங்கித் தா' என்று ஒரு வாரமாகத் தொந்தரவு செய்து கொண்டிருந்தான் கண்ணுச்சாமி. பழனிக்கு வாங்கிக் கொடுக்கக் கூடாது என்பதில்லை; கை வரவில்லை.

பழனிக்கு இனம் புரியாமல் சினம் வந்தது. ''எலே, வாயைத்

பழனி விக்கித்து நின்றான். இதயம் தடதடவென்று அடித்துக்கொண்டது.

காலையில் அவனுக்கு ஏன் அவ்வளவு சீற்றம் வந்தது? கட்டி அணைப்பதற்கே அன்றி வேறு எதற்கும் பயன்படாத அவனுடைய கைகள் அன்று ஏன் பேய்க் கரங்களாக மாறின?

> வாழ்க்கையில் நீங்கள் பட்ட அடிகள் உங்களை அவனிடம் நெருக்கமாகச் சேர்க்கட்டும். அவன் ஒருவனே இப்போதும் பிற்பாடும் நேசிக்கப்பட வேண்டியவன். அப்படி நேசிப்பதால், முன்பு நடந்தது, இப்போது நடப்பது, இனி நடக்கப் போவது சகலத்திலும் அவனை உணரலாம்; கிட்டியவை, இழந்தவை எல்லாவற்றையும் அவனில் - அவன் ஒருவனில் மட்டுமே காணலாம். — ஸ்வாமி விவேகானந்தர்

தொடர்ந்தே.... தோலை உரிக்கப்படுவேன். ரெண்டு நாள் போகட்டும் டான்னு....."'

அன்று அவன் உயர் வகுப்புப் பெட்டி மெத்தையில் படித்திருந்த தூசியைத் தட்டுவதற்காக அதை எடுத்து உதறுகையில், தொப்பென்று விழுந்தது — ஒரு பம்பரம்!

"என்ன?.... பம்பரம், பம்பரமா!...."

சில தடவைகள் கனத்த மணிபர்சுகள்கூட அவன் கையில் சிக்கியதுண்டு. ஏன், ஒரு தரம் ஒரு பொன் வளையலைக் கண்டெடுத்திருக்கிறானே? அப்போதெல்லாம் அவன் உள்ளத்தில் ஓர் அனுதாப உணர்ச்சிதான் தோன்றும். 'இதைத் தொலைத்தவர் என்ன தவிப்புத் தவிக்கிறாரோ!' என்று வருந்துவான். இன்று இன்ப முண்டாயிற்று அவனுக்கு, வண்ணக் கருக்கு அழியாத பம்பரத்தைக் கண்டதும்.

ஃ ஃ ஃ

சங்கு மீண்டும் அலறி மாலை மணி ஒன்று ஆகி விட்டதை உணர்த்தியது. 'லோகோ ஷெட்'டில் அலுவல் பார்ப்பவர்கள் வேலைக்கு வரும் நேரம்; மதிய உணவுக்காகப் பழனி வீடு செல்லும் நேரம்!

மற்றத் தினங்களைப் போல் அல்ல, இன்று. அவன் இதயம் இன்றைக்கு மகிழ்ச்சியால் பூரித்துக் கிடக்கிறது. காலையில், எந்தப் பொருளின் காரணமாக, கண்ணுசாமி அடிபட்டு அலறினானோ அந்தப் பொருள் இப்போது பழனியின் பைக்குள் இருக்கிறது.

பழனியா — தொழிற்சாலையிலிருந்து வெளியே வந்த உயர் வகுப்புப் புதுப் பெட்டி போல் அப்பழுக்கில்லாத சரித்திரம் உடைய அவனா — இப்படிச் செய்கிறான்?

'....செய்தா என்னவாம்? இது என்ன பணப் பையா, குடையா, வேறு சாமான்களா? வெறும், ஒரு பம்பரம்! அதுவுங்கூட, கண்ணுவை அடித்து அழ வைத்து விட்டதால் தான். இல்லாவிட்டால் அதை டி. எஸ். ஆர். கையில் ஒப்படைத்திருக்க மாட்டேனா?'

வாழ்க்கையில் நேர்மை மட்டும் போதாது. அடக்கமும் வேண்டும். 'நான் நேர்மையோடு நடக்கிறேன்' என்ற செருக்கோடு தலையை நிமிர்த்தினால், கண்ணுக்குத் தெரியாமல் மேலே தொங்கிக் கொண்டிருக்கும் பாரம், 'ணங்' என்று இடிக்கும்! நேர்மைதான் வாழ்க்கை; அதன் பண்பும் பயனும் அதுவே என்று உணராமல் தனிச் சலுகைகளை வேறு எதிர்பார்க்கலாமா?

'எட்டு வருஷங்களாய் வேலை பார்க்கிறேன். என் நேர்மையை எல்லாரும் புகழுகிறார்கள். அதனால் எனக்கு என்ன லாபம்?... இந்தத் தடவை மட்டும்தானே? ஒரு பம்பரந்தானே?'

எதிரில் குமாரசாமியின் எட்டு வயதுப் பெண் செல்வி, உணவு நிறைந்த அலுமினியப் பாத்திரத்துடன் வருவதைக் கண்டான். வழக்கமான காட்சிதான். இன்று அவளுடன் பேச வேண்டும் போல் குறுகுறுத்தது பழனிக்கு.

''செல்வி! நீ தூரத்திலே வர்றப்பவே கமகமக்கிறதே!... கையிலே மீன்குழம்பா?''

கேட்ட கேள்விக்கு அவள் பதில் தரவில்லை. ''உங்க மகன் கட்டை விரல் ஒடிஞ்சு போச்சு...''

பழனிக்குத் தன் மன நிலையை மாற்றிக் கொள்வதற்கே சில விநாடிகள் ஆயின.

''என்னது?.... என்ன சொல்றே செல்வி?''

''ஆமாங்கறேன்.... முத்தையன், சோனி, அம்மாசி எல்லாருமா பம்பரம் ஆடிக்கிட்டிருந்தாங்க. உங்க மகன் ரொம்ப நேரமா அதையே பார்த்துக்கிட்டிருந்தான். சோனி 'ஆரும் கோச'க்காகப் பம்பரத்தை விட்டப்போ, அவன் ஓடியாந்தான்....''

பழனி விருட்டென்று திரும்பி ஓடினான், தன் அதிகாரியின் அலுவலகம் நோக்கி. பைக்குள் இருந்த பம்பரத்தை அவர் எதிரே வைத்தான். ''காரேஜிலே கிடந்தது.... நான் வீட்டுக்குப் போய் வாரேன்.....'' சிட்டாய்ப் பறந்தான் பழனி.

நெஞ்சைப் பார்த்துச் சொல்லிக் கொண்டான். 'கை மேல் பலன்டா, பழனி! வாழ்க்கையில் ஒரு முறை தவறினாய்; ஒரே ஒரு முறை. ஆனால் தண்டனையின் கோரத்தைப் பார்த்தாயா? எந்த விரல் இருந்தால் மட்டும் பம்பரம் விட முடியுமோ, அந்த விரல் போச்சு! இந்த காசுக்காகவா, ஒரு மாபெரும் தத்துவத்தைப் பலி கொடுத்தேன்?''

மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்க வீட்டுக்குள் நுழைந்தான் பழனி.

''கண்ணுசாமி எங்கே?''

''ஏன், இப்படிப் பறக்கிறீங்க? அவன் விளையாடப் போயிருக்கான்....''

''....ஒடிஞ்ச விரலோடேயா?... செல்வி சொல்லிச்சே?''

''அது கண்ணு இல்லே, முனியன். வெரல் ஒடிஞ்சும் போயிடலே. தரையைப் பாராமல் ஓடியிருக்கான். கல்லுத் தடுக்கி 'அம்மா'ன்னு விழுந்திட்டான். வலி தாங்கலே. வெரல் ஒடிஞ்சு போச்சடான்னு சொல்லிப்பிட்டு, பதறிக்கிட்டே வந்தான். தேய்ச்சுவிட்டேன். சரியாய்ப் போச்சு! இப்ப தோட்டத்துப் பக்கம் போயிருக்கான்.''

பழனி பெருமூச்சு விட்டுக் கொண்டே, தலை முண்டாசை அவிழ்த்து உதறினான். முண்டாசிலிருந்த தூசியோடு தன் கண்ணை மறைத்த மாசுகளையும் உதறினான். கணப் பொழுதில் தாழ்ந்ததைப் போலவே, கணப் பொழுதில் அவன் உயர்ந்தும் விட்டான்.

'தலைக்கு மேலே' இருப்பதை அவன் இனி மேல் மறப்பானா?

Printed & Published by R Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# சிறந்த அமிலநாசினியும், மலமிளக்கியும்




## நம்பிக்கை

ஒவ்வொரு துறையிலும சில தயாரிப்புகள்தான் சிறந்த குணமும், பல வருடங்களாக நம்பிக்கையானதாகவும் பெயர் பெற்று உயர்ந்த இடம் பெற்றிருக்கின்றன. இந்தநம்பிக்கையான தன்மைதான் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உலகில் எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டும் 75 வருடங்களுக்கு மேலாக சிபார்சு செய்யப்பட்ட உலகமறிந்த தாயரிப்பும் ஆகும்.

அதிகாரம் பெற்ற தயாரிப்பாளர்கள் :
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்

